# ஸ்ரீ கோடகநல்லூர் சுந்தரஸ்வாமிகள்



ராமாநந்த பாரதி

# ஸ்ரீ
# கோடகநல்லூர்
# சுந்தரஸ்வாமிகள்


ஆசிரியர் :

**சுவாமி ராமாநந்தபாரதி**
**( K. R. R. சாஸ்திரி )**

மொழி பெயர்ப்பாளர் :

**பரிமளம் க. கிருஷ்ணமூர்த்தி**



திங்கள் பிரசுரம்
3, கொண்டி செட்டித் தெரு, சென்னை-1

# முன்னுரை

ஸ்ரீ கோடக நல்லூர் சுந்தர ஸ்வாமிகளது சரித்திரம் (1831—1878) இமயஜோதி ஸ்ரீ சிவாநந்த சுவாமிகளின் ஆக்ஞைக்கிணங்க 1945இல் ஆங்கிலத்தில் எழுதப்பட்டது. ஒரு பிரயாகைவாசி தென்னாட்டுச் சித்தரைப்பற்றி எவ்வாறு எழுதமுடியும்? ஏதோ ஒரு மாதிரி பெரிய வக்கில் படிக்காமல் மற்றோர் உதவியால் பேசி கக்ஷிக்காரருக்கு ஜயம் தேடுவது மாதிரி முடிந்தது.

எனவே ஓய்வுபெற்று மயிலைக்குத் திரும்பவும், ஆன்றோரிடமும் அன்பரிடமும் தகவல்களைத் திரட்டி, வள்ளல் பத்மஸ்ரீ V. வைத்தியசுப்பிரமணிய அய்யர் உதவியால் 1969இல் ஒரு வரலாறு ஆங்கிலத்தில் வந்தது.

துறவறம் பூண்டு, தாமிரவருணி பாதயாத்திரை ஸ்ரீ சுந்தரர் மரபினில் 1970இல் இனிது நிறைவேறியது. அச்சமயம் எல்லாம் சுந்திரனருளே எனப்பட்டது.

சுந்தரதாஸர் பிரம்மஸ்ரீ S. N. சங்கரய்யர் என்கிற நல்லாரிணக்கம் வெகு ஆர்வத்தைக் கிளப்பியது.

சகோதரன் அரிமளம் க. கிருஷ்ணமூர்த்தி இந்தச் சிறு நூலை இனிய தமிழில் மொழிபெயர்த்தார். மொழிபெயர்ப்பு நிரடான வேலை. இரு பாஷைகள் வல்லபம் வேண்டுமே.

1967இல் ஸ்ரீவைஷ்ணவியைச் சரண்புகுந்தபின், அடியேன் எழுதியவைகளைப் படித்து ஊக்கம் கொடுக்கிறவர் ஸ்ரீ சாது பிரம்மணியம்.

தவிர, ஸ்ரீ வைஷ்ணவி ஆசிரமத்திலுள்ள ஏழு சகோதரிகள் இந்த நூலைப் படித்தனர். "ரதம் நன்றாய் ஓடுகிறது" என்றனர்.

ஞானசித்த, ஸ்ரீ சுந்தரனாரது சரித்திரத்தைச் சிவபக்தி ஊறவேண்டுவோர் படித்து முன்னேறட்டும்.

ராமாநந்த பாரதி



ஸ்ரீ சுந்தர ஸ்வாமிகள்

உ

ஓம் ஸ்ரீரமண ஸத்குருவின் கிருபை
ஓம் ஸ்ரீ சற்குரு சேஷன் துணை.
ஸ்ரீசுந்தரன் திருவருள் நிறை

ஸ்ரீ

# கோடக நல்லூர் சுந்தர ஸ்வாமிகள்
# (1831—1878)

## இளமை வாழ்க்கை

பத்தொன்பதாம் நூற்றுண்டின் இந்தியக் கலாசார சரித்திரம் மும்மணிகளாகிய ஸ்ரீ இராமகிருஷ்ண பரம ஹம்சர், கோடகநல்லூர் சுந்தர ஸ்வாமிகள், வடலூர் இராம லிங்க வள்ளலார் ஆகியோரைக் கொண்டும் விளக்கிக் காட்டப்பட முடியும். கோடகநல்லூர் சுந்தர ஸ்வாமிகளும், வடலூர் வள்ளலாரும் சிதம்பரத்தில் சந்தித்ததாகக் கூறப் படுகிறது. இரண்டு சித்த புருஷர்கள் சந்திப்பதென்பது மிகவும் அபூர்வமான நிகழ்ச்சியாகும். பரமஹம்சர் "ஞான-பக்தி" யோகத்தைக் காட்டினுர். சுந்தர ஸ்வாமிகள் சிவ ராஜ யோகத்தில் தலைசிறந்தவராகத் திகழ்ந்தார். வடலூர் இராமலிங்க ஸ்வாமிகள் ஆறுமுகப் பெருமானின் திருவரு ளால் அடையும் சமாதிக்குப் பிரதிநிதியாக விளங்கினுர்.

நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் என்னும் சிறந்த இனத்தவரால் சுந்தர ஸ்வாமிகள் மிக அதிகமாக நினைவு படுத்தப்பெறுகிறுர். அவ்வினத்தாரிடையே அவர் சிவ பூஜை செய்யும் முறையாகிய சிவ பக்தியையும், விபூதியின் மகிமையையும், ஏகமுக ருத்திராக்ஷம் அணிவதையும் பதிய வைத்தார். இந்த ஞான சித்தர் நிகழ்த்திய அற்புதங்களை மிகவும் சிரத்தையோடு கேள்விப்படக் கேள்விப்பட, அவை

அவற்றை நம்புவோருக்கு நம்பிக்கை யூட்டின என்று கூறத் திருப்தியடைகிறேன். திருநெல்வேலியிலிருந்து வக்கீல்களில் சிறந்தவரான ஸ்ரீ A. கிருஷ்ணசாமி ஐயர் அவருடைய சக்தியைக் காண விரும்பியபோது, சுவாமிகள் அவரைக் காசிக்குத் தந்தியடிக்கக் கூறி, அங்கிருந்து மறு நாள் காலையில் மிகப் புனிதமான மனிகர்ணிகா ஸ்நான கட்டத்தில் சுவாமிகள் குளித்த செய்தியைப் பெறும்படியும் கூறினார். மகா மகோபாத்தியாய சுவாமிநாதையர் அவர்கள் திருவாவடுதுறை (தஞ்சை மாவட்டம்) மடத்தில் படித்துக்கொண்டிருக்கும்போது, ஸ்ரீ சுந்தர ஸ்வாமிகளைத் தரிசித்ததாக 1940ஆம் ஆண்டு அக்டோபர் 4ஆம் நாள் எழுதினார். அவர் எழுதியதாவது: "அவரிடம் பொலிந்து ததும்பிய சக்தியைப் பெற்று மகிழ்ந்தேன். மேலும் அவருடைய சொற்பொழிவைக் கேட்டு ஏராளமாகத் தெரிந்து கொண்டேன்." உடுப்பி ஸ்ரீ விஜயீந்திர தீர்த்த ஸ்வாமிகள், ஸ்ரீ சுந்தர ஸ்வாமிகளைத் திருவையாற்றில் தரிசித்ததாக 1940ஆம் ஆண்டு நவம்பர் 16ஆம் தேதி எழுதினார். சக்திமானாகிய ஸ்ரீ சுந்தர ஸ்வாமிகள் தன் வாயிலிருந்த வெற்றிலைச் சாற்றினைக் கண்களில் துப்பி இறந்த பதினாறு வயதுப் பையன் ஒருவனை உயிர்பெறச் செய்த அற்புதத்தைச் சுவாமிமலையில் தாம் கண்டதாக வெளியிட்டார்.

சுந்தர ஸ்வாமிகளின் வாழ்க்கை அன்னதான அரசாக விளங்குதல், இருபத்திரண்டு ஆலயங்களில் கும்பாபிஷேகம் செய்தல், பக்தர்களிடம் சிவ வழிபாட்டைத் தோற்றுவித்தல், வேதாந்த பாதையில் சித்த புருஷராய் விளங்குதல் ஆகிய படலங்களைக் கொண்டது.

மனைவியையும் தன் வழியில் (ஞான வழியில்) அழைத்துச் செல்லுதல், சிவ பூஜையைப் பெண்களுக்கும், அந்தணரல்லாதவர்களுக்கும் எடுத்துவைத்தல் ஆகியவை

பரம ஹம்ஸருக்கும், இவருக்கும் உள்ள இணையில்லா ஒற்றுமையாகும்.

சந்தேகப்ருகிரிதியான "தாமஸை"ப் போல (ஏசு பிரானை நம்பாதவர்) சந்தேகிப்பவர்கள், அரிமளம் சமாதியை ஒருமுறை தரிசிப்பது, அபூர்வமான இவருடைய மகத்துவத்தை உணரச்செய்யும்.

## பிறப்பும் பயிற்சியும்

1831ஆம் ஆண்டு, டிசம்பர் மாதம் 3ஆம் நாள் (1007 கொல்லம் ஆண்டு; கர—கார்த்திகை—20ஆம் தேதி சனிக்கிழமை) அனுஷ நட்சத்திரத்தில் ரிஷப லக்னத்தில் அமாவாசை நாளில் ஸ்ரீவத்ஸ கோத்திரத்தில் கங்கைகொண்டானில் ஸ்ரீ யக்ஞேஸ்வர சாஸ்திரிகளுக்கும், காமாட்சி அம்மாளுக்கும் சுந்தரம் மகனாக அவதரித்தார்.[1]

அவர் பிறந்த சமயம் :—கிரக நிலை.

சனி திசை மீதியிருப்பு 9 வரு, 6 மாதம், 12 நாள்.

| | | | |
|---|---|---|---|
| | | ல | |
| | இராசி | | இராகு |
| கேது குரு | | | சனி |
| புதன் | சூரி. சந். செவ். | சுக். | |

| | | | |
|---|---|---|---|
| | | | செவ். புதன் |
| இராகு / ல | அம்சம் | | |
| | | | குரு கேது |
| சூரி. | சுக். | சனி | சந். |

(1) இராமாநந்த பாரதியின் பிறப்பு தாம்பிரவருணிக்கரை - அனுஷம் - ஸ்ரீவத்ஸ கோத்திரம்,

ஸேபியன் வான சாஸ்திரப்படி இவர் பிறந்தபோது ''ஓர் அணையா விளக்கு ஒரு புராதன விக்கிரகத்தின்மேல் ஒளி வீசிற்று''—(கும்பாபிஷேகம் விக்கிரக சுத்திக்குத்தானே!)

புகழ் பெற்ற அப்பைய தீட்சதர் மரபினரான சுந்தர ஸ்வாமிகளின் குருதி நாளங்களில் சிவ பக்தி ஓடிக்கொண்டிருந்தது. குடும்பத்தின் இரண்டாவது மகனான சுந்தரம் பதினெட்டு மாதங்களுக்குள் தாய் தந்தையரை இழந்தார். வேங்கட சுப்பையர் என்னும் அவருடைய தாய்மாமன், குழந்தைகளிருவரையும் பத்தமடை என்ற கிராமத்திற்கு அழைத்துச் சென்றார். அக்ஷராப்பியாசம் (எழுத்தறிவித்தல்) ஐந்தாம் ஆண்டில் நடைபெற்றது. உபநயனம் ஏழாம் வயதில் நிகழ்ந்தது.

நண்பர்களுடன் விளையாடும்போதும் சிவ பஜனையிலும் சுந்தரம் மற்றவர்களை விஞ்சி நின்றார்; மேலும் பத்மாசன, யோகாசன முறைகளில் ஈடுபட விரும்பினார். பத்தமடை ஸ்ரீ கிருஷ்ண கனபாடிகளிடம் சுந்தரம் வேதாத்யயனம் செய்தார்.

வீரவ நல்லூர் சோமசுந்தர சாஸ்திரிகளிடம் இளைய சுந்தரம் பிரஸ்தானத்திரயங்களைக் கற்றார். (பிரம்ம சூத்திரம், உபநிஷதங்கள், கீதை) வியாகரணம், தர்க்கம், பூர்வமீமாம்சை ஆகியவற்றிலும் சம்பிரதாயமான பயிற்சியைப் பெற்றார்.

அருகிலிருந்த பத்தமடைக்கு வந்து சூத சம்ஹிதையை விசேஷமாகக் கற்றார்.

தினமும் அவர் சிவ பூஜையும், ஓர் இலட்சம் பஞ்சாட்சர ஜபமும் செய்துவந்தார். அப்போதிருந்தே, அவர் சுந்தர சிவனார் என்ற புனைபெயரால் அழைக்கப்பட்டார்.

## திருமணமும், பயணங்களும்

அதே மாவட்டத்திலுள்ள அடைச்சாணி என்னும் ஊரிலிருந்த வைதீக முறையிலான சிவ பக்தி கொண்ட இராமசுப்பையரின் மகளான ஜானகியைச் சுந்தரத்துக்கு அவருடைய மாமா திருமணம் செய்து வைத்தார். விபூதியும் ருத்திராட்சமும் அணிந்த சிவபக்தர் எப்போது அக் கிராமத்திற்கு வந்தாலும் சுந்தரத்தின் வீட்டில், அவர்களுக்கு நல்ல வரவேற்பு கிடைத்தது. அடைச்சாணிக்கு அழைத்து அவருடைய மாமனூர் பாணலிங்கம், நடராஜர், சிவகாமி விக்கிரகங்கள் ஆகியவற்றை அளித்தார்; சரியான சிவ பூஜை முறையையும் கற்பித்தார்.

நாள்தோறும் ஒரு லட்சம் வில்வ இலைகளால் சிவபூஜை செய்யப்பட்டு அந்நாட்கள் மிகவும் நன்ருகக் கடந்தன. இரவில் அவர் ஆலய தரிசனம் செய்தார். ஸ்ரீ இராமகிருஷ்ண பரம ஹம்ஸரிடம் அன்னை சாரதாதேவி நடந்துகொண்டதைப்போலவே, அவரிடம் அவருடைய மனைவி நடந்துகொண்டாள்.

## குருவை எதிர்நோக்குதல்

அவர் அடைச்சாணிக்குச் செல்லத் தூண்டப்பெற்ருர்; அங்கே ஸ்ரீ விஸ்வேச்வர சாஸ்திரிகளிடம் மந்திர உபதேசம் பெற்ருர். பத்தமடைக்குத் திரும்பிப் புனித வாழ்க்கை நடத்தினுர்; சூதசம்ஹிதையை விரித்து உரைக்கத் தொடங்கினுர்.

## யாத்திரைகள்

ஒரு நதியின் பிறப்பிடத்திலிருந்து முகத்துவாரம் வரையும் நடத்தலும், அப்புனித நதியைச் சுற்றி உலாவுதலும் ஒரு புனிதமுறையிலான யாத்திரையாகும். அநேக

மகான்கள் இதைக் கங்கையிலும் நர்மதையிலும் செய்திருக்கிருர்கள் (உ-ம். சுவாமி பிரம்மானந்தா நர்மதையில் செய்தார்) சுந்தரசிவம் தாமிர பரணியில் பாணதீர்த்தத்தில் தொடங்கித் திருச்செந்தூர் வரையில் சுற்றி உலாவி வந்தார். ஆங்காங்கே புனித இடங்களிலெல்லாம் சுந்தரனூர் சிவபஜனை நிகழ்த்தினூர்; சூத சம்ஹிதையை விரித்துரைத்தார்.

இப்புகழ்பெற்ற உதாரணத்தால் உந்தப்பெற்று சாது இராமாநந்தன், புனித தாமிர பரணியின் பரிக்கிரமணத்தை இருபத்தேழு நாட்களில் முடித்தான் (3-6-70 முதல் 30-6-70 பாபநாசத்திலிருந்து பாபநாசம் வரை)

அவர் அவருடைய குருவிடமிருந்து தட்சிணூமூர்த்தியிலிருந்து வரும் குரு பரம்பரையை அறிந்தார்.

சுந்தர ஸ்வாமிகளின் குருபரம்பரை பின்வருமாறு:-

தட்சிணூமூர்த்தி
(நார்ராயணர்)
|
பத்மபுவர்
|
வசிஷ்டர்
|
சக்தி
|
பராசரர்
|
வியாசர்
|
சுகர்
|
கௌடபாதர்

கோவிந்த யோகீந்திரர்

ஆதிகுரு சங்கராச்சாரியர்

பத்மபாதர் ஹஸ்தமாலகர் தோடகர் வார்த்திகாகரர்

(சுரேஸ்வராசாரியர்)

வித்யாசங்கரர்

வித்யாரண்யர்

அப்பைய தீட்சிதர்

நீலகண்ட தீட்சிதர்

அனந்த நாராயண சாஸ்திரிகள்

யக்ஞேஸ்வர பட்டர்

யக்ஞ ஹம்சர்

ராமசுப்ரம்மணிய புண்டரீகர்

சிவசுப்ரமண்யர்

ராமச்சந்திரசாஸ்திரி

விஸ்வேஸ்வரர்

சுந்தர யதீந்திரர்

### காசியாத்திரை

இந்து பக்தர் ஒருவரின் வாழ்க்கையில் வடக்கே யாத்திரை செய்வது முன்னேற்றத்தின் ஒருபடியாக எப்போதும் இருந்து வந்திருக்கிறது. அவர் மதுரை, ஜம்பு கேஸ்வரம், திருவையாறு, மாயவரம், சீர்காழி, சிதம்பரம், வேதாரண்யம், விருத்தாசலம் இவைகளைத் தரிசித்து விட்டுக் காசியை அடைந்தார்.

### மகா கணபதி ஸ்வாமியைச் சந்தித்தல்

காசியில் பெரிய யோகியான மஹாகணபதி ஸ்வாமிகள் என்னும் ஆறுமாதங்களுக்குக் கங்கைக்குள் வாழும் பழக்க முடையவரை இவர் சந்தித்ததாகச் சொல்லப்படுகிறது. அவர்கள் தண்ணீருக்குள் சந்தித்தனர். பக்தி மிகுந்த சுந்தரனுருக்கு அது எவ்வளவு அற்புதமான சந்திப்பு! மும்மடங்கு புனிதமான மணிகர்ணிகா கட்டத்திற்குச் செல்லுவோர், இவ்விரண்டு மகான்களின் கற்சிலேகளே யும் கண்டு வழிபடலாம்.

பத்தமடைக்குத் திரும்பி, அவருடைய குரு அடைச் சாணியில் சமாதியடைந்ததை அறிந்தார்; மிகுந்த மரியாதையுடன் அதைச் சென்று தரிசித்தார்.

### ஐந்து நாட்களில் சூத சம்ஹிதையை விரித்துரைத்தல்

சுந்தரனர் காசியிலிருந்து திரும்பியதும் சிலகாலம் மௌனம் அனுஷ்டித்தார். கோடகநல்லூரில், அழைப்பின் பேரில் "பஞ்சாக முறைப்படி" ஐந்து நாட்களில் சூத சம்ஹிதையைப்பற்றி உரையாற்றினர். 'சப்தாக முறைப்படி' ஸ்ரீமத் பாகவதத்தை சுகர், பரீக்ஷித் மன்னனுக்கு ஏழு நாட்களில் சிறந்த முறையில் விளக்கியதைத் தெரிந்து கொள்வது நல்லது. (இதைப்போன்ற முறையில்

திருநெல்வேலி மாவட்டம் தருவையைச் சேர்ந்த ஸ்ரீ லக்ஷ்மி நாராயண சாஸ்திரிகள் நடத்தினர்) "பஞ்சாக" முறையில் ஐந்து நாட்களில் முழுக்கிரந்தத்தையும் பாராயணமும், பிரவசனம் செய்வதும், சிவனுக்கு ஐந்து தலை இருப்பதைக் குறிப்பதாகும்.

## அவருடைய வித்வத் சந்நியாசம்

சுந்தரனர், சுத்தமல்லி என்ற பக்கத்துக் கிராமத்திற்குச் சென்றிருந்தார்; மறுநாள் கடையம் சேஷாசலதீட்சிதர் மூலத்தைப்படித்துக்கொண்டிருக்க,இவர் விவரித்துக்கொண்டிருக்கும்போது, சுந்தர சிவன் தன்னுள் ஓர் அழைப்பினைக் கேட்டார்; உடனே இரண்டாவது ஆசிரமத்தைக் கடந்தார்; ஓர் உண்மையான வித்வத் சந்நியாசத்தைப் பெற்றார். இது அவருடைய இருபத் தோராம் வயதில் நடந்தது.

## வித்வத் சந்நியாசத்தின் சிறப்பு

அரிய துறவினல் வரும் இந்த சந்நியாசத்தைச் சரிவரப் புரிந்துகொள்ள, ஜீவன்முக்தி விவேகத்தில் விளக்கப் பெற்றுள்ள கீழ்க்கண்ட சந்நியாச முறைகளை அறிவது நல்லது.

1. விவிதிச சந்நியாசம்:—ஞானம் நாடித் துறவு (அ) குடிசகம் (ஆ) பஹூதகம் (இ) ஹம்சம் (ஈ) பரமஹம்சம் (உ) துரியாதீதம் (ஊ) அவதூதம்.

2. வித்வத் சந்நியாசம்:-ஞானம் உணர்ந்தோன் துறவு

ச்ரவண மனனம், நிதித்யாசனம், சமாதி முதலியவை களால் ஞானம் உணர்ந்தோன் துறவு வித்வத்சந்நியாசத்தின் விளக்கமாகும்.

யாக்ஞவல்கியர் பலவகையில் உண்மையை நிலைநாட்டி ஆஸ்வலாயன முனிவரையும் மற்றும் பல அந்தணர்களையும் விவாதத்தில் தோல்விபெறச்செய்து ஜனகருக்கு உயர்ந்த பிரும்மஞானத்தைத் தோற்றுவித்துத் தன்னுடைய மனைவியான மைத்ரேயிக்கு ஞான ஒளியை ஊட்டிச் சந்நியாசம் கொடுத்தார். தன் துறவு வாழ்வைத் தொடர்ந்தார்.

சுந்தரசிவம் தன்னுள் ஒலியைக் கேட்ட அந்தக் கணத்திலேயே யாக்ஞவல்கியருடைய பாதையில், ஞானம் உணர்ந்த நிலையில் துறவறமாம் பெருநிலையை அடைந்தார்.

## சுவாமிகளின் யாத்திரை

இருபத்து மூன்றும் வயதில் சுவாமிகள் திருநெல்வேலி சங்கராச்சாரிய மடத்தில் வசித்துவந்தார். ஆன்மீகப் பயிற்சிகளுக்குத் தனிமையான இடம் தேவைப்பட்டதால் சுவாமிகள் கோடகநல்லூர் ஆற்றங்கரையிலிருந்த மூங்கில் புதர்களை நாடிச்சென்றூர். கோடகநல்லூரில் மேல்நிலையை அடைந்து யோகியானதால், நம் சுவாமிகள் அதிலிருந்து தமிழ் நாட்டில் கோடகநல்லூர் சுந்தர ஸ்வாமிகள் என அழைக்கப்பட்டார்.

அவர் சங்கரமடத்திலேயே சூதசம்ஹிதை விரிவுரையைத் (சொற்பொழிவைத்) தொடங்கினூர். இச்சமயத்தில்தான் சதாசிவ தர்வாடி, கிருஷ்ண தர்வாடி, மாவடி சிதம்பரம் பிள்ளை ஆகியோர்கள் அவருடைய தீவிர பக்தர்களாயினர்.

சுத்தமல்லி சூர்ய நாராயண சிவம் என்பவர் சூதசம்ஹிதையைப் படிப்பார்; சுவாமிகள் அதை விளக்கு

வார். இரவில் சிவநாம பஜனையும், சேஷாசல தீட்சதரின் உபந்நியாசமும் இருக்கும்.

சதாசிவ தர்வாடி, ஆன்ம உணர்வூட்டும் அச்சொற் பொழிவுகளின் நலனைப் பலரும் பெற, அவரைப் பல கிராமங்களுக்கும் அழைத்துச் சென்றார்.

சுவாமிகளின் கட்டளையின்படி குஜராத்தி பிராமணர் கள் ஒரு பஜனை மடம் கட்டி அங்கே முறையான வழிபாட்டிற்காக நடராஜர் படத்தை வைத்தார்கள்.

காந்திமதியம்மனின் திருவிழாவில், தேவியைப் பாலாம் பிகையாகவும், எட்டாம் நாளன்று கோலாட்டச் சிறுமியா கவும் வழிபடும்படி சுவாமிகள் ஆலோசனை கூறினார். அம்மாதிரி வழிபடுவதின் நுட்பம், சுவாமிகள் நிகழ்த்திய அற்புதச் செயல்களைப்பற்றிப் படிக்கும் அத்தியாயங்களில் தெளிவாகும். ஒரு பக்தர் இரு தங்கக் கோலாட்டங்களை உபயம் செய்தார். அவை இன்றும் காந்திமதியம்மன் திருவிழாவில் பயன்படுவதைக் காணலாம்.

## ஓர் அரிய நிகழ்ச்சி

ஒரு தீபாவளி நாளில் சுவாமிகள் கம்பாநதிக் கரையில் வசித்துவந்தபோது, இராமச்சந்திர மேத்தா மற்றும் சில பக்தர்களின் கூட்டத்தில் சுவாமிகள் இருந்தார். சுவாமிகள், வலது உள்ளங்கையில் நெருப்பு இருப்பதால், ஒருவர் உண்ணும் உணவு அவ்விடத்தில் படக்கூடாது என்றார். காமாட்சியம்மன் அர்ச்சகர் சுப்பிரமணியபட்டர் அப்போது புஷ்பங்கள், அரிசியுடன் கொட்டாங்கச்சியில் நெருப்புடன் வந்தார். நெருப்பு மழையில் நனைந்தது; அணைந்தது. அப்போது பட்டர், சுவாமிகளை, பக்தர் ஒருவர் மூலம் நெருப்பைப் பெற்றுத்தர வேண்டினார். சுவாமிகள்

ஆவுடையப்ப பிள்ளையை நெருப்பு வாங்கிவர அனுப்பினர். எனினும் இராமச்சந்திர மேத்தா "சுவாமிகள் உள்ளங்கையிலிருந்து நெருப்பை உண்டாக்க முடியாதா?" என நினைவுபடுத்தினர். சுவாமிகள் மேத்தாவை அவரது மேலாடையைத் தருமாறு கேட்டார். அதை உள்ளங்கையில் தேய்த்தார். அந்தோ! எழுந்தது நெருப்பு! அன்றிரவு பூஜைக்கு அப்புனித நெருப்பே பயன்பட்டது. இராமச்சந்திர மேத்தா சுவாமிகளிடம் மன்னிப்புக் கோரினர். 'இது குழந்தையின் விளையாட்டு; பயப்படாதே' எனச் சுவாமிகள் பதில் கூறினர்.

## இலட்ச தீபத் திருவிழா

பிரதோஷநாள் ஒன்றின் மாலை வேளையில் உட்பிரகாரத்தைச் சுற்றிவரும்போது, அங்கு ஏராளமான விளக்குகளைக் கண்ட சுவாமிகள் மகிழ்ந்தார். அது கோயில் மணியத்தால் நன்கொடை பெற்று ஏற்பாடு செய்யப்பட்டிருப்பது எனக் கேள்வியுற்றார்; அப்போது ஓர் அன்பரின் வேண்டுகோளின் பேரில், மகரசங்கராந்தியில் திருவநந்தபுரத்தில் நடைபெறுவதைப்போல, இலட்ச தீப விழா நடத்த சுவாமிகள் தன் தலையசைப்பின் மூலம் ஒத்துக்கொண்டார்.

சதாசிவ தர்வாடி, நெல்லையப்பபிள்ளை, தளவாய் இராமசாமி முதலியார் ஆகியோர் பின்தொடர சுவாமிகள் அருகிலிருந்த கிராமங்களுக்குச் சென்று இருபதாயிரம் ரூபாய்கள் சேர்த்தார்.

1864ஆம் ஆண்டு தை அமாவாசையை முன்னிட்டுப் பதினொரு நாட்களுக்கு மஹாருத்ராபிஷேகம், வேதபாராயணம், புராணப் பிரவசனம், சூதசம்ஹிதை விரிவுரை, அன்னதானம் ஆகியவை நடைபெற்றன. அப்போதுதான்

முதன்முறையாகக் காந்திமதியம்மன் கோயிலில் இலட்ச தீபத் திருவிழா நடைபெற்றது.

## சிவபஜனை—ஒரு தவறற்ற பாதை

சங்கர மடத்தில் தங்கியிருந்தபோது K. சிதம்பரம் பிள்ளை என்ற ஒருவர் சுவாமிகளின் திருவடிகளில் விழுந்து வணங்கினர். சுவாமிகள் அப்போது கூறிய அறிவுரை, "இறைவனின் திருவடிகளில் வீழ்ந்து வணங்காவிட்டால் ஆன்ம ஞானத்திற்கு வேறு வழியில்லை. சிவபஜனை செய். தியானமே தியானத்தைப் பெருக்குகிறது. அன்பினைப் பெருக்கப் பெருக்க அஞ்ஞான உணர்வு மறைகிறது. உடலில் பொன்னொளி பிறக்கிறது. உள்ளத்தை உருக்கச் சிவபஜனையே அரிய முறை." அவர் சுவாமிகளின் அறிவுரையைப் பின்பற்றினர்.

## சிருங்கேரி ஜகத்குருவின் விஜயம்

சுவாமிகள் பஜனை மடத்தில் தங்கியிருந்தபோது சிருங்கேரி ஜகத்குரு உக்ர (நரசிம்மபாரதி—8) திருநெல் வேலிக்கு விஜயம் செய்திருந்தார்; ஜகத்குரு இந்த மகானைப்பற்றி அறிந்ததும் ஸ்வாமிகளை அழைத்து அங்குக் கூடியிருந்தவர்களிடம் சுந்தர ஸ்வாமிகள் அவதாரபுருஷர் என்று கூறி, அவருடைய பெருமைகளை எடுத்துரைத்தார்.

## சுவாமிகளின் பொதியமலை விஜயம்

கோடைக்காலத்தில் அகஸ்திய மாமுனி வாழும் பொதிய மலைக்குப் புறப்பட்டார். கடும் நோன்புகளை மேற்கொண்டார். சுவாமிகள் அகஸ்தியரைச் சந்தித்து ஆசிபெற்றதாகப் பரவலாக நம்பப்பட்டு வருகிறது. மகான்களின் கூட்டத்தில் ஐம்பதாண்டுகட்கு ஒருமுறை அகஸ்தியர் தரிசனம் தருவதாக நம்பப்படுகிறது.

## குருக்குத்துறை விஜயம்

திருநெல்வேலிக்கு மிக அருகில் தாமிரபரணி ஆற்றின் நடுவில் முருகப்பெருமானின் கற்பாறைக்கோயில் ஒன்று உள்ளது. வெள்ளக்காலத்தில் கோயில் நீரில் மூழ்குகிறது. சுவாமிகள் குருக்குத்துறைக் கோயிலுக்கு விஜயம் செய்தார்; அப்போது திப்பிராஜபுரம் சிவசுவாமிகள் இவரைச் சந்தித்து ஆசிபெற்று, இவரோடு தங்கினர். பின்னர் அவரே,சுவாமிகளின் பிரதம சிஷ்யரான பிச்சு சுவாமிகளாக ஆனார். அவர் சுவாமிகளின் வாழ்க்கையையும் உபதேசங்களையும் ஆறு பாடல்களில் பாடியுள்ளார்.

## பல்வேறு பக்தர்கட்கும் உபதேசம்

பக்தர்கள் கூட்டம் கூட்டமாக வந்தனர்; சிலருக்குச் சிவன் நாமத்தை மெய்ம்மறந்து பாடி பஜனைசெய்தலையும், ஒருசிலருக்கு உபந்நியாசங்கள் கேட்டல், தியானம் முதலியனவும், மற்றும் சிலருக்கு விக்ரஹ ஆராதனை ஏற்புடையன எனவும் உபதேசித்தார்.

சேரை சௌந்தர பாண்டியன்பிள்ளை, சுவாமிகளிடம் உபதேசம் பெறவந்தார்; சுவாமிகள் கூறினர்: "மகனே! பிரம்மஞானம் மட்டுமே மோட்சத்திற்குக் கொண்டு செல்லும். சுந்தரமுகவுணர்வினலேயே மெய்ப்பொருள் உணரப்படவேண்டும். காணப்படுவதும், இனிமையாய் இருப்பதும், வடிவிலும் பெயரிலும் மாறுபடுவனவும்–எல்லாமே சிவத்தின் சாரமே. அவை அனைத்தும் சிவனே. இதுவே உயர்ந்த ஞானம்."

## "ஸ்வாநுபூதி ரசாயனம்"

முத்துக்களான ஞான மொழிகளைக் கேட்டுச் சௌந்தர பாண்டியன் தேக ப்ரஞ்ஞை இழந்தார். (நிஷ்டைநிலை)

அவற்றை எழுத்துவடிவில் வடித்துத்தர சுவாமிகளிடம் வேண்டினர். அதன் விளைவாகவே அவருடைய முதல் நூலான ஸ்வாநுபூதி ரசாயனம் மலர்ந்தது.

## புதுக்கோட்டைக்கு அழைப்பு

புதுக்கோட்டை ஒட்டுத்திண்ணைப் பரதேசி சுவாமிகள் புதுக்கோட்டைக்கு வரவேண்டுமென்று விரும்பினர். சுவாமிகள் புதுவைக்குச் சென்றார். தர்வாடியும், சௌந்தர பாண்டியன் பிள்ளையும் அவருடன் சென்றனர்.

புதுவை இராமா சாஸ்திரிகள் என்ற சிறந்த பக்தரும் அவருடைய குடும்பத்தினரும் சுவாமிகளிடத்தில் மிகவும் ஈடுபாடு கொண்டனர்.

சுப்பராய சிவன், இராமபாகவதர், இராமசாமி சாஸ்திரிகள், அப்புநாயக்கர், மற்றும் சிலரின் வேண்டுகோளின்படி பெரிய கூட்டத்தில் சூத சம்ஹிதையின் உபந்யாசம் நிகழ்த்தப்பட்டது.

## பெண்டிர் ஞானத்திற்கும் உரியவரே

நம் நாட்டில் சாதாரணமாகக் கருதுவது போலச் சில வைதீக அந்தணர்கள் "பெண்களும், அந்தணரல்லாதோரும் உபநிடதங்களைப் பயில அருகதையற்றவர்கள்" என்னும் அபிப்பிராயத்தை எழுப்பினர்.

'கடவுளே இந்த ஐயத்தை இங்கே இப்போது நீக்குவார்" எனச் சுவாமிகள் பதிலுரைத்தார். அப்போது இராமசாமி சாஸ்திரிகளும் அவருடைய ஐந்து வயது மகளுடன் சுவாமிகளைத் தன் இல்லத்திற்கு அழைத்தார்.

அச்சிறுமியை நோக்கிச் சுந்தர ஸ்வாமிகள் "உனக்கு என்ன வேண்டும்?" என வினவினர். "சாதுக்களைத் தரிசிப்

பதையும், நிறைஞானம் பெறுவதையும்விட எனக்கு வேறு என்ன வேண்டும்?'' என்ருள் அச்சிறுமி. சுவாமிகள் அவளை ஆசீர்வதித்துத் திருநீறு அணிவித்துக் காதில் உபதேசம் வழங்கினுர். வீட்டை யடைந்ததும் அப்பெண் வீட்டை கூடிஞள்! சிலமணிநேரங்களுக்கு அவள் சகஜநிலை அடையவில்லை. அவள் நிலைகுறித்துச் சந்தேகித்தவர்கள் இறைவனைத் தொழத் தொடங்கினர்.

சுவாமிகள் அச்சிறுமியைத் தடவி, உணர்வூட்டியதும் அவள் பழைய நிலையை அடைந்தாள். இச்சம்பவம் அவருடைய முதல்நாள் உபந்நியாசத்தின்போது நிகழ்ந்தது.

## இரண்டாம் நாள்

இராமா சாஸ்திரிகளின் வண்டிக்காரரான ரெங்கக் கோனுர் என்பவர் இரண்டாம் நாளில் 'தான் பிர்ம்ம சொரூபம்' என்று வியந்து கூறிக்கொண்டே ஆனந்தக் கூத்தாடினுர்.

இவ்விதமாக அவருடைய புதுவை விஜயம் பெண்டிருக்கும், அந்தணரல்லாதோர்க்கும் உபதேசிப்பதின் துவக்கமாய் அமைந்தது.

## புதுக்கோட்டையில் சுவாமிகள்

அரிமளம் சிவராமன் செட்டியார், புதுவயல் அழகப்ப செட்டியார் என்னும் இருபெரு பக்தர்களைப் புதுக்கோட்டையில் சுவாமிகள் கவர்ந்தார். தஞ்சாவூர் வணிகர் ஒருவர் பதஞ்சலி, வியாக்ரபாதருடன் கூடிய நடராஜர் படம் ஒன்று வைத்திருந்தார். சுவாமிகள் அது வழிபாட்டிற்குத் தகுந்தது என்று கூறினுர். உடனே அதைச் சிவராமன் செட்டியார் வாங்கினுர். சுவாமிகள் சிவராமன் செட்டியாருடன்

திருநெல்வேலி மடத்திற்குச் சென்று அங்கு அதை வைத்தார். பஜனை கே. சிதம்பரம்பிள்ளையைப் பூசை செய்துவரச் சொன்னார்.

## புதுக்கோட்டையில் மற்றுமொரு நிகழ்ச்சி

சேஷப்பா என்னும் அந்தணர் ஒருவர் சுவாமிகளிடம் விரைந்து வந்து "நீங்கள் செய்வதெல்லாம் வெறும் மாயாஜாலவித்தை. இன்று முதல் தாங்கள் இதை நிறுத்திக் கொள்ள வேண்டும்" என்றார். வியப்பேதுமடையாமல் சுவாமிகள் சேஷப்பாவை நோக்கினர். உடனே அவரது உடல் புல்தரையில் விழுந்தது. நாற்பத்தைந்து நிமிடங் களுக்குப்பிறகு, தூக்கத்திலிருந்து எழுபவர்போல் எழுந்தார். திட்டவந்தவர் துதிக்கத் துவங்கினர்.

## தில்லைக்கு

திருநெல்வேலியில் சில நாட்கள் தங்கியபிறகு, சுவாமிகள் தில்லைக்குச் சென்றார்; சிற்சபேசருக்கு முதுகாப் பட்டி ஜமீன்தாரின் உதவியுடன் ஒரு தேரைச் செய்தார்.

## திருவண்ணாமலையில்

அருணகிரியை அடைந்து கிரிப்பிரதட்சிணம் செய்தார். கீழ்ப்புறத்தை அடைந்தபோது "மகாதேவர் பிரும்மாவுக்கும் திருமாலுக்கும் ஜோதிவடிவத்தில் காட்சியளித்ததால், எல்லாப் பக்தர்களும் அசைவற்ற இக்குன்றைப் பரஞ் சோதியாக வழிபடுகின்றனர்" என்று தன் பக்தர்களிடம் கூறினார்.

## திருநெல்வேலிக்குத் திரும்புதல்

வரும்வழியில் கும்பகோணத்திற்கு விஜயம் செய்தார். பின்னர் திருநெல்வேலியை அடைந்தார். அவர் எங்கு

சென்றாலும் பக்தர் கூட்டம் அவரைத் தொடர்ந்தது. அவருடைய பொருள் நிறைந்த சூத சம்ஹிதை பற்றிய சொற்பொழிவுகளைக் கேட்டது.

பொறியியல் அலுவலக எழுத்தரான காந்திமதி நாதபிள்ளை சுவாமிகளின் சீடரானார். சதாசிவ தர்வாடி ஸ்வாநுபூதி ரசாயனத்தில் ஆழ்ந்து திளைத்துக் கேட்டார்; அதுவே ஸ்வாநுபூதி ரசமஞ்சரியாக வெளிவந்தது.

### சேதுவிற்கு

சுவாமிகள் புதுக்கோட்டைக்குச் சென்று, அங்கிருந்து சில பக்தர்களுடன் சேதுவிற்குப் புறப்பட்டார்.

### வழியில் இறைவன் உணவளித்தல்

வழியில் திருப்பத்தூரில் தங்கிய சுவாமிகள், அங்கு இராமசிவன் என்பவரைக் கோயிலுக்கு அனுப்பி ஏழு ப்ரஸாத பட்டைகளை வாங்கிவரச் சொன்னார். 'இப்போது சுத்தான்னம்தான் கிடைக்கும். அர்த்த ஜாமம் வந்தால், ஐந்து வகை ப்ரஸாதங்கள் கிடைக்கும்' என, அக்கோயில் பரிசாரகர் கூறினார். இராமசிவன் அர்த்த ஜாமத்தில் வருவதாக அவரிடம் பதிலுரைத்தார். சூதசம்ஹிதைச் சொற்பொழிவு இரவு ஒரு மணிக்கு முடிந்தது. இராமசிவன் கோயிலுக்குச் சென்றார்; கதவடைத்துவிட்டதைக் கண்டு திரும்பினார்.

ஆகவே சுவாமிகள் அன்றிரவு உண்ணாதிருக்க முடிவு செய்தார்.

அஹோ, விசித்திரம்! சிறிது நேரத்தில் கோயில் சமையற்காரரைப்போல் ஒருவர் வந்தார்; "திருநெல்வேலி

யிலிருந்து வந்துள்ள அந்தணர் எங்கே? உணவை நாடு வோன் அது இருக்குமிடம் தேடிவந்து பெறுவதில்லையா? அவ்வுணவா அவனை நாடி ஓடிவரும்?'' எனக் கேட்டார்.

வந்தவருடன் இராமசிவனைக் கோயிலுக்கு அனுப்பி னார் சுவாமிகள். கூட்டிவந்தவர் தட்டக் கோயிற் கதவு திறந்தது; சமையலறைக்கு(திருமடைப்பள்ளி)அழைத்துச் சென்றார்.

"ஏழு ப்ரஸாத பட்டைகளை வைத்தேன். அவற்றில் ஒன்றை எலியோ பூனையோ தின்றுவிட்டது. உங்களுக்கு ஆறு பட்டைகள் மிஞ்சி இருக்கின்றன'' என்றார் கூட்டி வந்தவர்.

வெளியில் வந்ததும் மீண்டும் கதவு தாழிட்டுக் கொண்டது! கூட்டி வந்தவரையோ காணவில்லை! இராம சிவன் வியந்து நின்றார்.

இராமசிவன் திரும்பி வராமையால், சுவாமிகள் ஆவுடையப்பபிள்ளையை அனுப்பினார். இருவரும் வியப் படைந்து திரும்பினர். எல்லோருக்கும் அவ்விறை ப்ரசாதத்தைக் கொடுத்தபின் ஒரு பட்டையை மட்டும் மறு நாளைக்காக மீதி வைத்தார் சுவாமிகள்.

சுவாமிகள், சேதுவைக் கண்ட (தரிசித்த) பலன் கிடைத்துவிட்டமையால் புதுக்கோட்டைக்குத் திரும்பினார்.

## மறுமுறை சேதுவிற்குச் செல்லுதல்

சில நாட்களுக்குப் பிறகு அரிமளம் சிவராமன் செட்டி யாருடனும் மற்றும் சிலருடனும் சுவாமிகள் இரு மாட்டு வண்டிகளில் இராமேச்வரத்திற்குப் புறப்பட்டார்.

திருமயத்தை அடைந்ததும் வண்டிக்காரன் சுவாமிகளைப் போன்று ஒருவர் போர்த்திக்கொண்டு வருவதைப் பார்த் தார்; அவர் வண்டியை நிறுத்தி, அவனைப் புதுக்கோட் டைக்கு வண்டியை ஓட்டுமாறு பணித்தார். சில மணி நேரத்திற்குப் பின் "நாம் இப்போது எங்கிருக்கிறோம்?" என வண்டிக்காரனிடம் சுவாமிகள் வினவ, "வண்டி புதுக்கோட்டைக்கு ஐந்து கல் தொலைவில் சென்று கொண்டிருப்பதாக" அவன் பதிலுரைத்தான்

சுவாமிகள் தான் வண்டியிலிருந்து கீழே இறங்கவே இல்லை என மறுத்தார். அவர்கள் எவ்விடத்திலிருந்து புதுக்கோட்டைக்குத் தேவ தூதனால் திருப்பி அனுப்பப் பட்டனரோ, அவ்விடத்திற்கு ஒரு கல் தொலைவில் பெரும் புயல் வீசி வீடுகள், மரங்கள், ஆடுமாடுகள், வண்டிகள் ஆகியவற்றை நாசப்படுத்திய செய்தி மறுநாள் அவர் களுக்குக் கிட்டியது. பாண்டிய மன்னன் மணிவாசகரை அடித்ததை இறைவன் தாங்கிக்கொள்ளவில்லையா? ராம லக்ஷ்மணர்கள் தியாகராஜரைத் திருடர்களிடமிருந்து காக்க வில்லையா?

## அரிமளத்தை அடைதல்

சிவராமன் செட்டியார் சுவாமிகளை அவருடைய ஊராகிய அரிமளத்திற்கு அழைத்துச் சென்றார். சுவாமி களின் பெருமுயற்சியால் அங்கு அவர் தங்கியிருந்தபோது ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வரர் ஆலயக் கும்பாபிஷேகம் நிகழ் வுற்றது.

அரிமளத்தில் வழிப்போக்கர்கட்கு உணவு வழங்கச் சத்திரம் ஏதுமில்லாமையைக் கண்டார். சத்திரம் துவங்க வேண்டிப் பலரிடமும் சுவாமிகள் எடுத்துரைத்தார்; அது பயன்படாமை கண்டு உண்ணாவிரதம் மேற்கொண்டார். விரைவில் அக்குறை நிறை செய்யப்பட்டது.

தன்னைத் தூய்மைப்படுத்திக் கொள்ளவும், பிறர் துன்பத்திற்காகத் தன்னை வருத்திக்கொள்ளவும் பிற்காலத்தில் அண்ணல் காந்தியார் இவ்வுண்ணு விரதமென்னும் உத்தியினைக் கையாண்டார். அறநோக்குடைய செல்வர்களுள்ளத்தில் அஃது எதிரொலித்தது. அதன் விளைவால் அப்போது ஓர் அன்ன சத்திரம் துவங்கியது. கோயிலூர் சிதம்பர ஐயா என்பவர் அரிமளம் கும்பாபிஷேகத்திற்குப் பணிபுரிய வந்திருந்தார். அவர் சுவாமிகளைத் தன் ஊருக்கு அழைத்தார். அவ்வழைப்பினை யொட்டி அவர் நகரத்தார் வாழும் பல ஊர்களுக்குச் சென்றார். செட்டிநாட்டுப் பகுதிகளில் சுவாமிகள் பயணம் செய்து நிகழ்த்திய சொற்பொழிவுகள்தான் அவ்வினத்தவர்களின் கழுத்தில் தங்கக் காப்பிட்ட ஒருமுனை அக்கமணி (ஏகமுக ருத்திராக்ஷம்) யும், நெற்றியில் திருநீறும் விளங்கப் பேருதவி புரிந்தது எனில், அது மிகையாகாது.

## சைவச் சின்னங்கள்

திருநீறு, அக்கமணி (ருத்திராக்ஷம்), திருவைக்-தெழுத்து ஆகியவற்றின் சிறப்பினை ஈண்டு நோக்குவோம். திருநீறு என்பது புனிதச் சாம்பல்; அஃதே இவ்வண்டத்தில் இறுதியாக எஞ்சுவது. சீவனின் மலமே அறியாமை. சாணம் என்பது பசுவின் மலம். பசு என்பதற்குச் சீவன் என்றும் பொருளுண்டு. ஆகவே சாணத்தைத் தூய வெண்ணீராக்கி நெற்றியில் அணியும்போது சீவன் 'அறிவுக் கடவுளாக' (ஞான ஈஸ்வரனாக) ஒளிர்கிறான்.

## அக்கமணி (ருத்திராக்ஷம்)

தீமைகளைக் களைவது அக்கமணியாகும். அஃது சிவனால் அணியப்பெறுகிறது. அஃது எப்போதும் சிவபெருமானின் நினைவை ஊட்டி, நமக்கு நலனை நல்குகிறது. அதைத் தொட்டால்கூட நம் உடல் புனிதமடைகிறது.

அரசமுத்திரை அரசர் இல்லாத இடத்தில் அவரை நினைவுகூரப் பயன்படுவதுபோல் சிவச்சின்னம் அவரை நினைவுபடுத்தும். அக்கமணியின்றிச் செய்யும் சிவபக்தி கண்ணற்ற அரசனுக்கு ஒப்பாகும்.

## திருவைந்தெழுத்து

ந-ம-சி-வா-ய என்னும் திருவைந்தெழுத்தே நான்கு வேதங்களால் கூறப்பெற்ற மெய்ப்பொருளாகும். அதுவே சீவன் இறைவனுக்குச் செலுத்தும் நன்றியுணர்வின் சின்னமாகும். பரமசிவமென்னும் பெருங்கடலில் தான் ஒரு சிறு துளி என்பதைச் சீவன் தனக்குக்குத்தானே கருத வேண்டும்.

## இரண்டாவது இலக்ஷ தீபம்

சுவாமிகளின் சிறந்த சீடர்களான நாராயண சிவம், இரங்கநாத சிவன் என்போர், நெல்லை பால கிருஷ்ண கனபாடிகள் மற்றும் சோழநாட்டு முத்து கனபாடிகள் ஆகியோரின் உதவியுடன் 1870 ஆம் ஆண்டில் திருநெல்வேலி நெல்லையப்பர் காந்திமதியம்மன் ஆலயத்தில் இலக்ஷதீப விழாவை நிகழ்த்தினர். (கொல்லம் ஆண்டு 1045-தை அமாவாசை) அத்துடன் மஹாருத்ராபிஷேகமும், ரிஷபவாகன உத்சவமும் நடைபெற்றன.

## மதுரை யாத்திரை

சுவாமிகள் தன் பக்தர்களுடன் மதுரை சென்று, அங்கு விபூதி மடத்தில் தங்கினர். நாராயண சிவம் பொற்றாமரைக் குளத்தில் யோக நிட்டை செய்துகொண்டிருந்தார்.

## நாராயண சிவத்தைக் காப்பாற்றுதல்

நாராயணசிவத்தின் உடல் நீருள் மூழ்கியது. எனவே சுப்பிரமணியக் குருக்கள் என்பார் அவ்வுடலை நீரினின்று

எடுக்கும்படி காவல்துறையினர்க்குத் (போலீஸ்) தகவல் கொடுத்தார். அவர்களின் பெருமுயற்சி பலன் தரவில்லை; மூன்றும் நாள் மீண்டும் அவ்வுடல் மிதந்தது. காவல் துறையினர் அதை எடுப்பதில் ஈடுபட்டனர்.

திடீரெனச் சுவாமிகள் அங்குத் தோன்றிக் காவல் துறையினரிடம் அவ்வுடலினை, அக்குளத்தின் தென்கரை யிலமைந்துள்ள விபூதி விநாயகரருகே கொண்டுவரும்படி எடுத்துக் கூறினர். இறந்து மூன்று நாட்கள் நீரில் மூழ்கிக் கிடந்த ஒருவரின் உடலைச் சோதிக்கும் நம்பமுடியாத இச்செயலைச் சுவாமிகள் செய்வதைக் கண்டு, ஆலய அதிகாரிகள் கேலிசெய்தனர். இறுதியாக, விநாயகரின் முன் இறந்த உடலை வைப்பதால் நட்டமேதும் இல்லை எனக் கருதிக் காவல் துறையினர் அதற்கு ஒப்பினர்.

சுவாமிகள் திருநீற்றை உடலில் தடவினர்; வலக் காதில் ஒரு மந்திரத்தை ஓதினர். நாராயண சிவம் எழுந்தார். சுவாமிகள் திருவடிகளில் விழுந்து வணங்கினர்! உடனே சூத சம்ஹிதையினைப் பஞ்சாக முறையில் எடுத்துரைக்க வேண்டினர். சூரிய நாராயணசிவம் என்பார் சூத சம்ஹிதையினைப் படிக்கச் சுவாமிகள் விளக்கங்களோடு அதனை விரித்துரைத்தார்.

அன்றிரவு சுவாமிகளின் ஸந்நிதானத்தில் சேஷாசல தீட்சிதர் என்பார் விரிவுரை நிகழ்த்தினர்.

"தெய்வீக அழைப்பு" என்னும் தன் நூலில் கவியோகி சுத்தானந்தபாரதி சுவாமிகளின் சூதசம்ஹிதைச் சொற் பொழிவைத் தம் தந்தையார் கேட்டதாகக் குறிப்பிடுகிறர். மதுரை சம்பந்தர் மடத்தில் சுவாமிகளின் சொற்பொழிவைத் திருச்சுழி வழக்கறிஞர் சுந்தரமையர் அவர்களும் கேட்டார். இவரது மகனே மஹரிஷி ரமணர்.

## திருசிரபுரம், திருவானைக்கா செல்லுதல்

சுவாமிகள் திருச்சி, திருவானைக்காவல் சென்று திருவையாற்றை அடைந்தார். திருவையாறு மற்றும் ஸப்தஸ்தானங்களில் கும்பாபிஷேகம் செய்தருளுமாறு ஒருவர் வேண்டினார். சின்னையா செட்டியார், சிவராமன் செட்டியார் ஆகிய இருவரையும், சுவாமிகள் அதுபற்றிக் கலந்து ஆலோசித்தார்.

## ஒரு தேவ தூதன்

சுவாமிகளும் அவருடைய பக்தர்களும் கபிஸ்தலத்திற்கு நிதி வசூலுக்காகச் சென்றனர்; அப்போது உமையாள்புரத்திற்கு அருகே அன்பம்மாள் என்பவள் வீட்டில் நாராயணசிவனின் உருவில் தேவதூதன் ஒருவன் சென்று "அம்மையே! நாளைக் காலை பத்து மணிக்கு ஸ்ரீ சுந்தரஸ்வாமிகள் வருவார்கள் அவருக்குப் பிள்ளையார் கோயிலில் பிக்ஷை அளிக்கவேணும்" என்றார்.

சுவாமிகள் கோயிலைத் தரிசித்தார்கள். அப்பெண்மணி "எனக்குத் தங்கள் வருகைபற்றி முன்னரே தகவல்தந்த நாராயணசிவம் எங்கே?" என வினவினாள். "இஃதெல்லாம் ஈசனின் திருவிளையாடல், நாராயண சிவம் இப்போது நாமக்கல்லுக்கருகேயுள்ள முத்துகாபட்டியில் இருக்கிறார். இறைவன் எனக்கு உணவு தேவைப்படும்போது இவ்விதமாகவே திருவிளையாடல் நிகழ்த்தி அதனைப் பெறச்செய்கிறார்" என்று சுவாமிகள் விடையளித்தார்.

## சுவாமிகள் சென்னையை அடைந்தார்

சுவாமிகள் தன் அன்பர் குழாத்துடன் சென்னையை அடைந்து, அங்கு ஏகாம்பரேசர் அக்கிரஹாரத்தில்

27-ஆம் எண்ணிட்ட இல்லத்தில் தங்கி இருந்தார். அவர் சூத சம்ஹிதைச் சொற்பொழிவுகளை நிகழ்த்த குஜராத்திப் பேட்டை புஷ்பகிரி மடத்தைத் தேர்ந்தெடுத்திருந்தனர். சதாசிவ தர்வாடியைப் போன்ற சில குஜராத்திய அந்தணர் கள் திருநெல்வேலியிலேயே சுவாமிகளின் மெய்யன்ப ராயின செய்தியை இங்கு நினைவுகொள்ளலாம். தஞ்சை யிலேயே சுவாமிகளிடம் பழகத் துவங்கிய ஸ்ரீ ஜீவபாய் அம்மாளும், அவளுடைய கணவன் சுப்பராய டாக்கர் அவர்களும் சென்னையில் சுவாமிகள் குஜராத்தி பேட்டையைத் தேர்ந்தெடுக்கக் காரணமாவர்.

பஞ்சாஹ முறைப்படி புஷ்பகிரி மடத்தில் அவர் சூத சம்ஹிதைச் சொற்பொழிவினை நிகழ்த்தினர். திருவை யாற்றுக் கும்பாபிஷேக விழாவிற்கு டாக்கர் குடும்பத்தின் மூலமாக அவர் நன்கொடை வசூலிக்க முடிந்தது.

அம்பாசங்கர் தவே, இராசாராம் தர்வாடி, இராஜாபாய் அம்மாள் டாகட் ஆகியோர் சுவாமிகளின் மெய்யன்ப ராயினர்

இரண்டாம் நாள் சொற்பொழிவின்போது அவையில் சிலர் ஐயப்பாடு (சுவாமிகளின் நிலைபற்றி) கொண்டவர் கள் வந்திருந்தனர். அவ்வையப்பாடு கொண்ட தாமஸ் போன்றவர்களின் ஐயம் நீக்கவே, நீண்டநேரம் சுவாமிகள் அமர்ந்திருந்த பீடத்துடன் காற்றில் மிதந்தார். ஸ்ரீவைஷ்ணவி ஆஸ்ரமத்தில் தற்போது வசித்துவரும் ஸ்ரீகிருஷ்ணஜி(வழக்கறிஞர்)அவர்கள்கூடத் தன் பாட்டியின் மூலம், "சுவாமிகள் உரையாற்றும்போது காற்றில் சில அடிகள் உயரத்தில் மிதப்பார்" எனக் கேள்வியுற்றிருக் கிறேன் என என்னிடம் கூறியுள்ளார்.

சென்னை ஸ்ரீ வைஷ்ணவி ஆஸ்ரமத்தில் என்னுடன் வசித்துவரும் சாது திருவேணி கிரி அவர்கள் "சுவாமிகளின்

தலைசிறந்த சீடராகிய பிச்சு சுவாமிகள், தம் குரு மேலே மிதப்பதைக் கண்டிருக்கிருர்'' என என்னிடம் கூறியிருக் கிருர்.

அதைக் கண்ணுற்ற ஐயப்பாடுகொண்டோர் அனைவரும் தீவிர மெய்யன்பராயினர்.

அற இயல்புடைய நங்கையாம் இராஜா பாய் அம்மாள் டாகட் மறுமுறை சூதசம்ஹிதை விரிவுரை நிகழச்செய்தார். சுவாமிகளின் திருவடிகளில் ரூ. 1008 காணிக்கையாக வைத்து வணங்கினுள்.

ஜீவாஜி அம்மாளின் பேரன் சிவசங்கர் டாக்கர் அவ்வம்மையாரின் தாய்வழி உறவினராம் மேடா குடும் பத்தினர், மற்றும் ஜீவாஜி அம்மாளின் உடன்பிறந்தவரின் குடும்பத்தினர் இன்றும் ஸ்ரீ சுந்தரஸ்வாமிகளின் திருவுருவப் படத்தை வழிபட்டுவருகின்றனர்.

சுவாமிகள் சென்னையில் தங்கியதின் விளைவு குஜராத்தி அந்தணர்களின் நெற்றியில் திருநீறும், கழுத்தில் அக்க மணியும் திகழப் பெருங்காரணமாக அமைந்தது எனில் அது மிகையாகாது.

## சப்தஸ்தானக் கும்பாபிஷேகங்கள் (1872)

பிறகு சுவாமிகள் காசி சென்றுர். திருவையாறடைந்து வசூலித்த தொகையைக் கொடுத்து குப்பாணி சிவம் என்பாரிடம் திருவையாறு கும்பாபிஷேகத் திருப்பணியை ஒப்படைத்தார். திருச்சோற்றுத்துரா, திருவேடிகுடி, திருக் கண்ணடையூர், திருநெய்தனம், திருப்பெரும் புலியூர், திருமழபாடி, திருத்திங்களூர், திருக்கடுவேலி ஆகிய ஊர்களின் கும்பாபிஷேக விழாக்களைப் பிற மெய்யன்பர்களை

ஏற்று நடத்தப் பணித்தார். ஏழு இடங்களிலும் ஒரே சமயத்தில் கும்பாபிஷேக விழா நிகழ்ந்தமை அதன் புனிதத் தன்மைக்கும், மாண்பிற்கும் ஈடும் எடுப்பும் இல்லாததாய் விளங்கியது.

சுவாமிகள் அன்னதான அரசாய் விளங்கினர். ஓர் இலட்சம் அந்தணர்கள் உணவு உண்டனர். கற்றோரும் செல்வரும் ஐந்து நாட்களில் நிகழ்வுற்ற அரிய கும்பாபிஷேக விழாக்களைக் கண்டு மகிழ்ந்தனர்.

## மகா வைத்தியநாத பாகவதர்

மகாவைத்யநாத சிவன் என்ற சிறந்த பாடகரும், அவருடைய உடன்பிறந்தோர் ஆன இராமசாமி பாகவதரும் சுவாமிகளின் திருமுன்னர் பாடிச் சுவாமிகளுக்கு அறிமுகமாயினர். கோயிலூர் முதலான செட்டிநாட்டுப் பகுதியிலிருந்து திருப்பணிக்கு அருந்தொண்டாற்றியவர் களும் விழாவிற்கு வந்தவர்களும் சுவாமிகளிடம் விடைபெற்று ஊர் திரும்பினர்.

## கங்கைகொண்டானில் கும்பாபிஷேக விழா

திருநெல்வேலி சங்கர மடத்தில் சுவாமிகள் தங்கியிருக் கும்போது அவருடைய பிறந்த ஊராகிய கங்கை கொண்டானைச் சேர்ந்தவர்கள் அவ்வூர் ஆனந்தவல்லி சமேத கைலாசநாதர் திருவாலயத்திற்குக் கும்பாபிஷேகம் செய்தருளச் சுவாமிகளை வணங்கி வேண்டினர். சிவராமன் செட்டியார் அவர்களின் வற்புறுத்தலிற்கிணங்கச் சுவாமிகள் இலங்கை சென்று நன்கொடை பெற்று வந்தார்.

திரும்புகையில், சுவாமிகள் பெரும் பொருளுடன் வருவதை அறிந்த திருடர்கள் ஆயுதங்கள் வைத்திருந்த பஜனைக் கூட்டத்தினரால் பயமுறுத்தப் பெற்றனர்.

காமதேனு வழிபட்ட இடமெனப் புகழ்வாய்ந்த கங்கை கொண்டானில் 1873ஆம் ஆண்டு (கொல்லம் ஆண்டு 1048; ஸ்ரீமுக, வைகாசி-10) குப்பாணிசிவத்தின் துணையால் கும்பாபிஷேகவிழா நடைபெற்றது. மகாவைத்தியநாத சிவனும் அவருடைய சகோதரரும் விழாவில் கலந்து கொண்டனர். சுவாமிகள் நிகழ்த்திய இறுதி கும்பாபிஷேக விழா இஃதே. மொத்தத்தில் சுவாமிகள் இருபத்திரண்டு கும்பாபிஷேக விழாக்களை நிகழ்த்தியிருக்கிறார்.

## பிரும்ம கீதை மொழிபெயர்ப்பு

மெய்யன்பர்களின் வேண்டுகோளுக்கு இணங்கச் சுவாமிகள் பிரும்ம கீதையைத் தமிழாக்கம் செய்து கூற, சொக்கலிங்கம் பிள்ளை என்பார் எழுதினார். காளத்தி முடுக்குத்தெருவிலிருந்த ஐயாசாமிப்பிள்ளை என்பார் சுவாமிகளைத் தரிசிக்கச் சங்கர மடத்திற்கு வந்தார்; அவர் பிரும்ம கீதைக்குத் தத்துவராய சுவாமிகள் செய்தருளிய மொழிபெயர்ப்போடு, இதனை ஒப்பிட்டார். இரண்டிற்குமிடையே காணப்பட்ட ஒற்றுமையைக் கண்டு பெருமகிழ்வெய்தினார்.

## சுந்தரம் பிள்ளையின் வருகை

சிறந்த புலமைமிக்க பேராசிரியர் பி. சுந்தரம்பிள்ளை என்பார் திருநெல்வேலி இந்துக்கல்லூரியின் முதல்வராய் திகழ்ந்தார்; அன்னார் சுவாமிகளைச் சங்கரமடத்தில் கண்டு வணங்கி, அவருடைய தலைசிறந்த அன்பரானார். நியாயம், வியாகரணம், பூர்வமீமாம்சை, சாங்கியம் ஆகியவற்றில் சுவாமிகளுக்கிருந்த ஆழ்ந்த ஞானத்தை அறிந்த சுந்தரம் பிள்ளை, அவற்றைச் சுருக்கமாக எழுதியருள வேண்டினார்;

அஃது சுவாமிகளால் நிறைவேற்றப்பட்டது. (சுவாமிகளின் "நிஜானந்த விலாசம்" என்னும் நூலின்கண் இணைக்கப் பட்டுள்ளது)

## குலசேகரப்பட்டினத்தில் இறுதி உரை

சுவாமிகள் இரண்டாம் நாள் சூத சம்ஹிதையினை உரையாற்றிக் கொண்டிருந்தபோது, பத்தமடையில் அவருடைய அண்ணன் குப்பாணிசிவம் காலமானதை ஞானதிருஷ்டியினால் அறிந்தார். சுவாமிகள் தம் சீடரான மாவடி சிதம்பரம் பிள்ளையிடம் இச்செய்தியினைத் தனிமை யில் தெரிவித்தார். உரையாற்றிக்கொண்டிருந்தபோது இடையில் சில நிமிஷங்களுக்கு மௌனமாக இருந்தார்.

நிலவொளியில் கடற்கரையில் சென்று கொண்டிருந்த போது சுவாமிகள் உரக்கக் கத்தினார். "ஏன் இவ்வாறு கத்தினீர்கள்" எனச் சுவாமிகளை அன்பர்கள் வேண்டினர். "திருடர்கள் பத்தமடை ஆலயத்திற்கு வந்துள்ளனர். (33 கல் தொலைவில் இருந்தது) இவ்வொலியால் தூங்கிக் கொண்டிருந்த கிராமத்தினருக்கு எச்சரிக்கை கொடுத் தேன்" என்றார் சுவாமிகள். அன்றிலிருந்து ஆறும் நாள், குப்பாணிசிவம் இறந்த செய்தியும், பத்தமடையில் திருடர்களை விரட்டிய எச்சரிக்கை ஒலியைப்பற்றிய செய்தியும் கொண்ட இருவேறு கடிதங்கள் சுவாமிகளுக்கு வந்தன.

## நிஜானந்த விலாசம்

சுவாமிகள் திருச்செந்தூர் சென்று முருகப்பெருமானை, வணங்கினார்; நெல்லையப்பர் கோயிலில் "பத்ரதீபம்" நிகழ்த்தினார்.

இறுதியாக அரிமளத்தை அடைந்தார்; மஹா வாக்கியங்கள், வேதாகம சம்பிரதாயப் பிரஹரணம், மனோநாச மார்க்கம் ஆகியவைகளைத் தொகுத்துக் கூறி எழுதச்செய்தார்; அதனை ''நிஜானந்த விலாசம்'' என வழங்கும்படி தன் அன்பர்களிடம் கூறினார். அத்தொகுப்பினை பஜனை சிதம்பரம் பிள்ளையிடம் வழங்கினார் (இன்றும் அச்சிடப்பட்ட அந்நூல் காணப்படுகிறது. சுவாமிகள் சூதசம்ஹிதை உரையினைச் சிறப்புற நிகழ்த்தியதை வடலூர் இராமலிங்க வள்ளலார் சிதம்பரத்தில் கேட்டார்; வள்ளலார் சுவாமிகளின் இறுதிக்காலம் (சமாதியாகும் காலம் நெருங்கி வந்து கொண்டிருப்பதைக் கூறினார்.

## அரிமளத்தில் சமாதி

1878 ஆம் ஆண்டு (கொல்லம் ஆண்டு 1054; ஐப்பசி 6 ஆம் நாள் திங்கட்கிழமை - கிருஷ்ணபட்ச தசமியில்) தன் மெய்யன்பர்களிடம் தனக்களிக்கப்பட்ட பாண லிங்கத்தை வழிபடுமாறு கூறி விட்டு அச்சிறந்த ஞான சித்தர் சமாதியடைந்தார்.

அரிமளத்தில் ஓர் அதிஷ்டானம் (சமாதி ஆலயம்) நிறுவப்பட்டது.

## சுவாமி சிவானந்தரின் பாராட்டு

நாம் அப்பெரிய ஞானசித்தரைப் பணிந்து பாராட்டு முன் அன்னாருக்கு ரிஷிகேச சிவானந்த சுவாமிகள் 19—6—1940 இல் அளித்துள்ள பாராட்டினைப் படிப்போம்:

சுவாமிகளிடம் ஜீவன் முக்தருக்குரிய இலக்கணங்கள் யாவும் காணப்பெற்றன. அவர் உலகினிடை வாழ்ந்தார் எனினும் உலகியலுடன் வாழவில்லை. எவ்விதப் பற்றும்

அற்று வாழ்ந்தார்; தன்முனைப்பு அற்றும், பயமின்றியும் எப்போதும் மகிழ்வுடனும், உறுதியுடனும் சுற்றித் திரிந்தார்.

என்னே அற்புதம்! முற்பிறப்பில் ஸ்ரீசுந்தர ஸ்வாமிகள் செய்த தவம்தான் என்னே! அறநெறி உறுதியோடு (ஸத்சங்கல்பம்) அவர் நிகழ்த்திய அற்புதங்கள்தான் எத்துணை! உலகிடை அவதரித்த கடவுளாகவே காணப் பட்டார்! என்னே அவர்தம் அமைதி! என்னே அவருடைய ஆற்றல்! நான் சுந்தர சுவாமிகளின் திருவடிகளில் விழுந்து வணங்குகிறேன். எங்கெல்லாம் சுவாமிகள் சென்றுரோ அங்கெல்லாம் ஆடவரும் பெண்டிரும் சீர்திருத்தப் பெற்றனர். அவர் ஒரு சக்திவாய்ந்த காந்தமாயிருந்தார். அவர் ஓர் அத்யாத்ம வீரராய்த் திகழ்ந்தார். அவர் மனித நிலையினின்று மேம்பட்டு விளங்கினுர். சிருங்கேரி ஜகத்குரு (நரசிம்மபாரதி—8) அவரை மதித்தார். உரிய முறையில் அமர்த்தி "ஓர் அவதார புருஷர்" என அழைத்தார். இந்த இமயஜோதி சத்குரு சிவாநந்தர் (டாக்டர் குப்புசாமி) வைராக்கியத்தை முதலில் கண்டவர் சுந்தரசுவாமிகளின் சீடரான நடராஜசிவம்.

அத்யாத்ம சக்தி என்னும் மின்சாரத்தை உற்பத்தி செய்யும் சக்திவாய்ந்த கருவியாக (Dynamo) விளங்கினுர். அவருடைய திருக்கரம் தீண்ட இறந்த பையன் ஒருவன் உயிர்பெற்றெழுந்தான்; அக்கரங்களே ஒரு சிறுமிக்கு மகாசமாதி நிலையைக் கொடுத்தன. அடர்ந்த மூங்கில் புதரில் நிர்விகற்ப சமாதியில் இருந்தபோது, சிவ பெருமானே அவருக்கு உணவு கொண்டுவந்து கொடுத் தார்! தியானத்தில் ஆர்வம் கொண்ட ஏராளமானவர்கள் பிரும்ம ஞானத்தை அடைய அவரே வழிகாட்டியாய் விளங்கினுர்.

ஆன்மீகச் சோதனைகளை, அத்துறையில் எழும் ஐயப்பாடுகளை நீக்கும்வண்ணம் தொகுத்துப் பல நூல்களாக எழுதியுள்ளார். அவைகளுள் மிக முக்கியமானவை. (1) ஸ்வானுபூதி ரசாயனம் (2) அனுபவ ரச மஞ்சரி (3) நிஜானந்த விலாசம் என்பவை. பிரும்ம கீதையை அவர் தமிழாக்கம் செய்துள்ளார்.*

## ஸ்வானுபூதி ரசாயனம்-உத்பத்திபிரகரணம்

"ஜீவேச்வரரை உள்ளபடி தெரிவிக்க வந்த சுருதிகளின் பயன் கரும காண்டம், உபாசனா காண்டம், ஞான காண்டம் என்று மூன்று பேதமாகும். சீவன் தேகாபிமானத்தோடுங் கூடினகாலத்திற் றேகத்தைப்பற்றின வருணாச்சிரம தருமங்களைப்போதிப்பிக்கும்; பின்பு வருணாச்சிரம கருமானுஷ்டானத்தால் அந்தர் முகப்பட்ட காலத்திற் சீவனுக்கு இருதய கமலத்தினீஸ்வரனுடைய சகுணோபாசனையை விதிக்கும் உலகவாடிக்கை முதற் பிரமலோக வரையிலும்நிராசையாய்முமுட்சுவான காலத்திற் சீவனுக்கு ஞானகாண்டத்தை விதிக்கும் இந்த முமுட்சுவுக்கு ஞான காண்டத்தின் விபரந்தெரியக்கூறுதல், சீவன் எப்பொழு தருசியுடன் ஜகத்துக் கண்ணைத் தள்ளி, முத்தி வழி தேடுகிறானோ அப்போதவனுய்யும்பொருட்டு பிரம்மோபதேசத்தைச் சொல்லுகிறதுடன் ஆசாரியார் முகமாயுபதேசிக்குங் குருசிஷ்யர்களின் நடத்தையும் தெரியக் கூறுகின்றது.

## வேதாகம ஸம்பிரதாய நிருபணபிரகரணம்

ஸகுண உபாஸகர்கள் தீராத சண்டைகளிலீடுபடுகின்றனர். இந்த பாகத்தை நமது சுவாமிகள் வெகு திறமையாகவும் ஸ்பஷ்டமாகவும் நமக்குப் போதிக்கிறார்:—

---

* இந்த மொழிபெயர்ப்பு அடியேனுக்குக் கிடைக்கவில்லை.

"சாமானியமெனவும் விசேஷமெனவும் சாஸ்திர மிரு பிரிவுடையதாகும். அவற்றுள் சுருதியொன்று மாத்திரம் சாமானிய மெனவும் மற்ற சிவ ஆகம முதலிய ஆகமங்கள் விசேஷமெனவும் கூறப்படும். சாமானியமென்பது, கர்ம, பக்தி, யோக, ஞான மார்க்கங்களையும் தேவதாகுணைச்வரியங்களை யும் உள்ள வாறபிமானமின்றி போதித்துக் குறித்து போதிக் கக்கூடாத விடத்து இளைப்பாறி நிற்கும். மனுவாதி ஸ்மிருதி களும், அங்ஙனமே கூறிநிற்கும்.

விசேஷமென்பது பொது நூலிற் கூறிய ஒவ்வொரு வகுப்புக்களையும் ஒவ்வொரு தேவதாபரமாக ஆக்கி, பொது நூலை அனுஸரித்து மனுஸரியாதது போல விசேஷ வகுப் புடையதாய்க் குறித்து நிற்கும்.

இதில் விசேஷ நூலைச் சார்ந்தவர்கள் அந்தந்த விசேஷ நூலை அபிமானித்து, பொது நூலைச் சாமானியமென நிஷேதிப்பார்கள். அங்ஙனம் நிஷேதிப்பது, அச்சமயிகளின் அவிவேகமேயன்று, வேறன்று.

ஏதெனில், பொதுநூல் ஒன்று தவிர மற்ற சமய நூல்க ளனைத்தும் பரஸ்பரம் விசேஷ நூல்களாகக் கொண்டு வாதிகளாய் வாதிக்குங்கால் உனக்கு அத்தேவன் கடவுள். எனக்கு இத்தேவன் கடவுள் என பல தேவர்களையும் கடவுளாய் சாதிப்பது நீங்கலாக சமாதானமின்றி பெருங் குற்றமுடையவர்களாய் பாவித்து மனச்சூடு சகியாமல் பொதுவாரிடம் வாதம் தீர்த்துக்கொள்ளுவதுபோல பொது நூலாகிய சுருதியினிடமாகவே அவர்களது மதவாதம் தீரவேண்டிவரும். அப்படித் தீர்த்துக்கொள்ளாத விஷயத் தில் மதவாதிகளுக்குள் நேரிட்ட கடவுள் விஷயமான மயக்கம் நீங்காது. பொது நூலை அபேக்ஷித்திடில் அம் மயக்கம் நீங்கிவிடும்.

ஆனால் இம்மயக்கத்தை நீக்கும்படியான நீதி என்ன இருக்கிறதெனில் சேதன மென்றும் அசேதன மென்றும் இரு வகுப்புடையது இப்பிரபஞ்சம். அவற்றுள் சேதன மெனும் ஒரு வகுப்பு அஹ மெனும் ஒரு விளக்கத்தில் அடங்கி நிற்கும்.

அசேதனமெனும் ஒரு வகுப்பு இஃதெனும் விளக்கத்தில் அடங்கி நிற்கும். இவ்வித விளக்கம் அகமெனும் இஃதெனும் உபாதி விகாரங்களை நீங்கிநிற்கின் சுத்த பரவஸ்து வாகும். அந்நூல்களால் பொது நூலிற் கூறிய அப்பர வஸ்துவையே அறமெனும் சேதன உபாதியையுடைய விசேஷ நூலிற் கூறிய அந்தந்த தேவர்களின் நாமரூபங்களை முன்னிட்டு கடவுளெனக் கூறப்படும்.''

## அத்வைத தீபிகா என்னும் இணையற்ற தமிழ்நூல்

முன் நாளில் ஆதிகுரு சங்கராச்சாரியாரும் ஏனைய மகான்களும் வேத ஆகம சாஸ்திரங்களுடைய விளக்கத்தைப்போல் பல்வேறு நூல்களை எழுதியுள்ளனர்; அவற்றால் ஆத்ம விசாரணை செய்வோர் தங்கள் நோக்கங்களை அடைவதற்கான வழிகள் பிறந்தன.

ஸ்ரீகரபாத்ர சுவாமிகள் என்பார் பின்நாளில் முக்கிய அடிப்படை உண்மைகளை வடமொழியில் தொகுத்துப் பன்னிரண்டு சிறுபகுதிகளாகப் (அத்தியாயம்) பிரித்து அதற்கு "ஸ்ரீ அத்வைத போத தீபிகா" எனப் பெயரிட்டார்.

இந்நூலினைச் சுந்தர ஸ்வாமிகள் உரை நடையில் தமிழாக்கம் செய்தார். ஸ்ரீவைஷ்ணவி ஆசிரமத்திலிருக்கும் சுவாமி வித்தியாநந்தகிரி அவர்கள் இந்நூலினைப் படித்திருக்கிறார். இந்நூல் தஞ்சை ஸ்ரீ. எஸ். இராமசுவாமி ஐயர் என்பாரிடத்தில் இருந்தது. ஸ்ரீரமணாஸ்ரமத்தினரால் இது

ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. அதை இப்போது ஸ்வாமி ராமானந்த பாரதி அச்சடித்திருக்கிறார்.

எட்டு அத்தியாயங்களே அச்சிடப்பட்டுள்ளன.

1. அதியாரோபம் (கற்பனை)
2. அபவாத (நிவருத்தி)
3. சாதனு (சாதனை)
4. சிரவணம் (கேள்வி)
5. மனனம் (மனதிலிருத்தல்)
6. வாஸனுக்ஷயம் (தொடர்பு அறுத்தல்)
7. ஸாக்ஷாத்காரம் (உருஅமைத்தல்)
8. மனோலயம் (மனம் ஒருமைப்படுதல்)

இறுதி நான்கு அத்தியாயங்கள் :

9. சவிகல்ப சமாதி
10. நிர்விகல்ப சமாதி
11. ஜீவன் முக்தி
12. விதேக முக்தி

(9–12: இவை கிடைக்கவில்லை)

## திருவைந்தெழுத்தின் சிறப்பு

மிகச் சிறந்த மந்திரமான திருவைந்தெழுத்தை (பஞ்சாட்சரம்) ஓதுவதையும், ஒருமுனை அக்கமணி (ஏகமுகருத்ராக்ஷம்) அணியச்செய்வதையும் தன் மெய்யன்பர்களிடம் தோற்றுவித்தது ஸ்ரீ சுந்தரசுவாமிகளின் பணிகளில் புகழ் மிகுந்ததாகும்.

சுவானுபவ ரச மஞ்சரி ஏழாம் பிரகரணத்தில் மிகச் சிறந்த முறையில் திருவைந்தெழுத்தினை விளக்கியுள்ளார். ந—ம—சி—வா—ய.

"பஞ்சாட்சரம்" மூவகைப்படும்—

1. அது அழிவினைக் கடந்து நிற்பது
2. உலகில் அது ஞானமாய் வடிவெடுக்கிறது; அழிவினைக் கடந்து விளங்குகிறது.

3. ஐந்து கர்த்தாக்கள்; ஐந்து மூலப்பொருள்கள், இருவகைப்பட்ட ஐந்து இந்திரியங்கள் (உணர்வுகள்)

4. ஐந்து நிலைகள்; அவைகள் ஐவேறு நிலைகளாய்க் காணப்படினும் அவற்றின் சாரம் ஒன்றே.

திருவைந்தெழுத்தின் ஐந்தெழுத்துக்கள் இவற்றை யெல்லாம் உணர்த்துகின்றன.

அரிய ஞானமும், ஆழ்ந்த கல்வியும், முதிர்ந்த வேதாந்த மும், சிறந்த தோற்றமும், மெய்யன்பர்களிடம் குறையாத அன்பும் ஒன்றுசேரத் தன் வாழ்நாளில் பலருக்கு மதிப்பிட முடியாத உதவியும், மெய்யுணர்வும் ஊட்டினர்; இன்றும் சமாதியில் இருந்தவண்ணம் தன் மெய்யன்பர்களை ஆட்படுத்தி, ஒளியும், மகிழ்வும் தரவல்ல பாதையினைக் காட்டுகிறார்; இறவாப் புகழும், அழியா அமைதியும் பெற்று விளங்குகிறார். அரிமள சமாதியில் சிவசக்தி ஐக்கிய ஸ்வரூபத்தைக் கண்டு அனுபவிக்கிறோம்.*

## பரமஹம்சருடன் ஒப்புநோக்குதல்

நாம் தொடக்கத்தில் கூறிய முப்பெரியார்களில், பரமஹம்சரும் சுந்தரஸ்வாமிகளும் ஐம்பது ஆண்டுகள் அல்லது அதற்குக் குறைவாக வாழ்ந்தவர்கள். ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்சருடன் ஒப்பிட அநேகக் கருத்துக்கள் உள்ளன. இருவரும் இளமையில் நிற்விகற்ப சமாதியடைந்தனர். இருவருக்கும் அந்தணரல்லாத அநேக சிடர்கள் இருந்தனர். பரமஹம்சர் அன்னை காளியின்

---

** 12—11—71 அரிமள இம்மகான் சமாதியில் தியானத் தில் சிவம் (சுந்தரர்) சக்தி (அன்னை ஜானகி) தர்சனம் கொடுத்தனர்.* (ராமாநந்த பாரதி)

அருளால் ஞானம் பெற்றுத் திகழ்ந்தார்; ஆயின் சுந்தர சுவாமிகளோ தன் குருவிடம் முறையாக வேதாந்த கல்வி கற்று ஞானியரானார்.

மகான் சுந்தரசுவாமிகள் தன் விபூதி, அக்கமணி (ருத்ராக்ஷம்), திருவைந்தெழுத்து, அன்னபூரணி அம்மையின் ஆழ்ந்த வழிபாடு (உபாசனை) ஸ்ரீவித்யா என்னும் தேவிக்கே தன்னை ஆட்படுத்திக்கொண்டமை, இவற்றால் தனக்கு ஏராளமான மெய்யன்பர்களை ஏற்படுத்திக் கொண்டார்; அரிமளத்தில் திகழும் அவருடைய ஆலயம் ஆயிரக்கணக்கான நகரத்தார்கட்கும், ஏனைய மெய்யன்பர்கட்கும் அபயமும், அடைக்கலமும் தரும் திருத்தலமாக விளங்குகிறது.

## இணையற்ற பாணலிங்கம்

அரிமளம் அதிஷ்டானத்தில் (சுந்தர சுவாமிகளின் ஆலயத்தில்) உள்ள பாணலிங்கம் காந்திமதி சமேத அனவரதநாயகர் (கைலாஸ நாதர்) எனப்பெயர் பெற்று விளங்குகிறது. அது சிவனும் சக்தியும் சேர்ந்த இணையற்ற லிங்கமாய் இலங்குகிறது.

அர்ச்சனைகளில் சிவநாமங்களுடன், தேவியின் நாமங்களும் கூறப்படுகின்றன.

## அவருடைய இருபெருஞ் சீடர்கள்

சுவாமிகளின் சிறந்த சீடர்களில், ரெங்கநாதசிவம், நாராயணசிவம் என்போர் குறிப்பிடத்தக்கோராவர். ரெங்கநாதசிவம் என்பார் தன் குருவைப்போலவே சூத சம்ஹிதையைப் பற்றி உரை நிகழ்த்திவந்தார்.

இராஜயோகி நாராயணசிவம் 65 ஆண்டுகள் பிரும்மச் சரியாய்த் திகழ்ந்து பின் யதீந்திரரானார். அவர் ஒரு சிறந்த ஞானி; தியானத்திலோ சமாதியிலோ மூழ்காத நேரங்களில் அவர் சங்கர பாஷ்யத்தைப் படித்து வந்தார்.

"ஒருவர் ஜபமோ பாராயணமோ சுந்தரசுவாமிகளின் அதிஷ்டானத்தில் செய்துவந்தால் மந்திரசித்தியும், காரிய சித்தியும் எய்துவர்" என நாராயணசிவம் அடிக்கடி கூறுவதுண்டு.*

## சுவாமிகளின் சித்திகள்

சுந்தரசுவாமிகளைப்போல இளமையிலிருந்தே நிர்விகற்ப சமாதியில் பயிற்சி (அனுபவம்) பெற்ற பெரியோர்கள் பற்பல அற்புதங்கள் நிகழ்த்துவதற்கு மறுக்கமுடியாத உண்மையான சான்றாக விளங்குகிறார்கள்.

இரமண மகரிஷி ஒருசமயம் தன் (சூக்ஷம) சரீரம் திருவொற்றியூரில் தாம் முன்னால் கண்டறியாத கணபதி ஆலயத்தில் இறங்கியதாகக் கூறினார். "இவ்வாறுதான் சித்தர்கள் செய்கிறார்கள் என்று எண்ணுகிறேன்" என்றார்.

நம்பிக்கை இன்மை, ஐயம் கொள்ளுதல், எதிர்ப் புணர்ச்சி கொள்ளுதல் இவை யாவினையும் தீர்ப்பதற்காகவே அத்தகைய அற்புதங்களை நிகழ்த்திக் காட்டுகின்றனர்.

இத்தருணத்தில் மற்றொன்றினையும் கவனித்தல் வேண்டும். தந்தையார் தங்கம் செய்வதில் மிகுந்த ஈடுபாடு கொண்டவர்; அதனால் அவர் ஒரு நாள் வீட்டைவிட்டு

---

** ஸ்ரீ. கே. ஆர். வெங்கட்டராமன்—ஸ்ரீ சங்கரகிருபா 1969-பக்கம் 138.*

வெளியேறிப் பொதிகமலையில் வேட்டையாடுபவர்களுடன் ஐந்தாண்டுகள் தங்கினார்; அவர் திரும்பியபின் ஓராண்டு கழித்து 9—1—1899இல் இச்சடலம் தோன்றியது. இச் செய்தியை தாயார் கூறியிருக்கிறாள். இப்படியே பற்பல கடந்தகால உண்மைகள் தலைமுறை தலைமுறையாக செவிவழியாக வருகின்றன.

அரிமளத்தில் 1878இல் சமாதியடைந்த ஸ்ரீ சுந்தர சுவாமிகளின் அற்புத லீலைகளைக் கண்டவர்களும் கண்டவர்கள் கூறக்கேட்டவர்களும் இன்றும் இருக்கிறார்கள்.

அவர் யாத்திரைகளில் நிகழ்த்திய அற்புதங்களைத் தவிர வேறுசில உண்மையான நிகழ்ச்சிகளைக் காண்போம்.

1872இல் நடைபெற்ற திருவையாறு கும்பாபிஷேக விழாவில் அந்தணர்கள் உணவு உண்ணும் நேரத்தில், அவருடைய மெய்யன்பர்கள் இன்னும் நெய் வந்து சேரவில்லை எனக் கூறினர்.

“இன்னும் வரவில்லையா?”எனச் சுவாமிகள் வினவினார். உடனே அவர் நான்கு குடங்களில் கோயில் குளத்திலிருந்து தண்ணீர் எடுத்துவரப் பணித்தார். திருநீற்றை அவற்றிலிட்டுத் திருவையாற்றுப் பஞ்ச நதீஸ்வரப் பெருமானைத் தியானித்தார். நான்கு குட நீரும் நெய்யாய் மாறிற்று! உடனே அது அந்தணர்கள் உண்ண ஊற்றப் பட்டது. சிறிது நேரங்கழித்து சொல்லிவைத்த (ஆர்டர் செய்யப்பட்ட)நெய் வந்தது. அதில் நான்கு குட நெய்யினை மட்டும் குளத்தில் கொட்டிவிடும்படியும், பிறவற்றைப் பயன்படுத்தும்படியும் சுவாமிகள் உத்திரவிட்டார். அங்கிருந்த அனைவரும் சுவாமிகளின் திருவடிகளில் விழுந்து வணங்கினர். அன்ன பூரணி தேவியின் திருவருட் கருணையினை வரையறுத்துக் கூற இயலுமோ!

திருவையாற்றுக் கும்பாபிஷேக விழாவிற்கு நிதி குறைந்ததை அறிந்த சுவாமிகள் தன் திருமுன் ஒரு துண்டினை விரித்து அமைதியாக அமர்ந்தார். அவ்வழியே சென்றோர் அனைவரும் பணமும், பொன்நகைகளும் அளித்துச் சென்றனர். இவ்வாறு விழாவிற்கான பற்றுக் குறை நிறை செய்யப்பட்டது என அதனை நேரில் கண்ணுற்ற குஜராத்திப் பெண் கூறியிருக்கிறாள்.

திருவையாற்றுக் கும்பாபிஷேகம் நிகழ்வுற்ற சமயத்தில் ஒரு முகம்மதியர் சுவாமிகள் தன் திருக்கரங்களால் தீண்டக்கூடாத உணவுப்பொருட்களைக் கொண்டு வந்து அவர் திருமுன் வைத்தார். சுவாமிகள் அவற்றைத் தொட்டார்; அந்தோ! அவை யாவும் பல்வேறு பழங்களாக மாறின! என்னே மகிழ்ச்சி! சோதிப்பவனையும் நோகச் செய்தாரில்லை.

## படகோட்டி அக்கரை சேர்

அவர் கங்கா நதியில் படகில் செல்லும்போது, கடும் புயற்காற்று வீசியது. உலக நாயகியாம் காளியை வழிபட்டுச் சுவாமிகள் அவர்களை அமைதியாக அமர்ந்திருக்கும்படி கூறினர். அந்தோ! அன்னை காளியே ஒரு வடிவெடுத்துப் படகினைக் கரை சேர்த்தாள்; பின்னர் மறைந்தாள் !

காசியில் ஒருசமயம் அந்தணர்களுக்கு உணவு அளிக்கும்போது, உணவுப் பற்றுக்குறை ஏற்பட்டது. சுவாமிகள் உணவு வைத்திருந்த பாத்திரங்களைத் தொட, உணவு என்றும் குறையாத அளவில் காணப்பட்டது. ஸ்ரீ தரைலிங்க சுவாமிகள் என்பார் சிறு மண் சட்டியிலிருந்த சிறிதளவு தயிரைத் தவிர அதில் வேறு தயிரேதும் ஊற்றுமலேயே காலையிலிருந்து இரவு வரை லாலா கடையில் •அத்

தயிரையே வழங்கியமை இங்கு வாசகர்களின் நினைவுக்கு வரும்.

## சுவாமிகளின் விரிவுரைகள்

அவருடைய முப்பெரும் வெளியீடுகளைத் தொகுத்துக் கூறுமுன், அவர் எங்கு சென்றாலும் பஞ்சாக முறையில் உரை நிகழ்த்திய சூத சம்ஹிதையைப் பற்றிய விவரங்கள் தருவது இன்றியமையாதது.

சூத சம்ஹிதை கந்த புராணத்தில் உள்ளது. அது நைமிசாரண்யத்தில் சூதரால் முனிவர்களுக்குக் கூறப் பெற்றது. சூதசம்ஹிதை இப்பொழுதுள்ள கந்த புராணத் தில் விடப்பட்டுள்ளது. வித்தியாரண்யர் சூத சம்ஹிதைக்கு விளக்கம் எழுதியிருக்கிறார் என்பதே அதன் சிறப்பினை விளக்கும். இப்பொழுது சூதசம்ஹிதை ஒரு தனி நூலாகவே விளங்குகிறது.

அதனுள் முதற் பெரும் பிரிவு (அத்தியாயம்) சிவ மகாத்மிய காண்டம்; முதற் சிறு பிரிவு எப்படி இவ்வண்டம் தோன்றியது என விளக்குகிறது.

இரண்டாம் சிறு பிரிவு பாசுபத விரதம்; மூன்றாவது நந்தீஸ்வரரும் திருமாலும் நிகழ்த்திய உரையாடல்; நான் காவது இறை வழிபாடு; ஐந்தாவது தேவி வழிபாட்டு விதி முறைகள்; ஆறாவது சிவபக்தி வழிபாட்டு விதி முறை களாகும். ஏழாவது முக்தி சாதனமாகும். பதின்மூன்றாவது இப்பரத கண்டத்தின் தீர்த்த மகிமைகளை விளக்குகிறது. அஃதே இறுதியானதாகும்.

சூதர் கீழ்வரும் தீர்த்தங்களைக் குறிப்பிடுகிறார் :—

1. கங்காத்வாரம்
2. சோமதீர்த்தம் (சோமநாதம்)
3. வாராணசி
4. பிரயாகை
5. கங்கா சாகரம்

| | | | |
|---|---|---|---|
| 6. | நர்மதை | 17. | விருத்தாசலம் |
| 7. | யமுனை | 18. | சிவகங்கை |
| 8. | சரஸ்வதி | 19. | பிரும்ம தீர்த்தம் |
| 9. | கோதாவரி | 20. | காவேரி சங்கம் |
| 10. | கிருஷ்ணவேணி | 21. | ஸ்வேதாரண்யம் |
| 11. | இந்திர கீலகிரி | 22. | கும்பகோணம் |
| 12. | சுவர்ணமுகி | 23. | மத்யார்ஜ்ஜுனம் |
| 13. | காளஹஸ்தி | 24. | காவேரி |
| 14. | கம்பா | 25. | தேவ தீர்த்தம் |
| 15. | குடிலா | 26. | சேது |
| 16. | மணிமுக்தா | 27. | ராமேஸ்வரம் |

இரண்டாம் காண்டம் ஞான யோகம்; அது 20 (இருபது) சிறு பிரிவுகளைக் கொண்டது. "சமாதி"யுடன் முடிவு பெறுகிறது.

மூன்றாவது காண்டம் முக்திக் காண்டம்; அது 9 (ஒன்பது) சிறு பிரிவுகளை உடையது; "ஈஸ்வர—ரித்ய தரிசனம்" (நடன தர்சனம்) என்பதுடன் அது முடிவடைகிறது.

நான்காம் காண்டம் யஜ்ன வைபவ காண்டம் என்பது; அதுவே மிக நீளமானது. அது "அவசிஸ்த பாப ஸ்வரூப கத்னம்" என்பதுடன் நிறைவு பெறுகிறது.

பிரும்ம கீதையும், சூத கீதையும் சூத சம்ஹிதையில் இணைக்கப்பட்டுள்ளன.

பிரும்ம கீதை பன்னிரண்டு சிறு பிரிவுகளையும், சூத கீதை எட்டு சிறு பிரிவுகளையும் கொண்டுள்ளன.

"தாத்பர்ய தீபிகா" என்னும் பெயரில் சூத சம்ஹிதைக்கு மத்வாச்சாரியார் விளக்கம் எழுதியிருக்கிறார்.

## சுவாமிகளின் நூல்கள்

அவர் மிக விரும்பி உரையாற்றிய சூத சம்ஹிதை உரைகளைத் தவிர, "பிரும்ம சூத்திர பாஷ்யம்", "பத்து உபநிஷதங்கள்" ஆகியவற்றினை மிகத் தெளிவாக உரையாற்றி இருக்கிறார்கள். "ஸ்வாநுபூதி ரசாயனம்", "சுவானுபவ ரச மஞ்சரி", "நிஜானந்த விலாசம்" என்னும் மூன்றும் அவருடைய சிறந்த படைப்புகள்.

## சுவாநுபூதி ரசாயனம்

அவருக்குச் சங்கர பாஷ்யத்தைக் கற்பித்த சுந்தர சாஸ்திரிகள், ஞான குருக்களான விஸ்வேஸ்வரர், சோம சுந்தர சாஸ்திரிகள் ஆகியோரைத் தம் குருக்களாகப் பாவித்து வணங்குகிறார்.

எல்லா சாஸ்திரங்களிலும் மூழ்குவோர் அனைவருக்கும் இந்நூலில் அவற்றின் சாரம் அடங்கியிருக்கிறது.

இந்நூல் 24 பிரகரணங்களைக் கொண்டது. அதன் நடை உள்ளத்தில் ஆழப் பதிவதாய் அமைந்துள்ளது; தெய்வீகப் பெரியோர்களால் விளக்கம் கூறப்பட்டால் அன்றி மாணவர்களுக்குச் (ஆன்மீகத் துறையில் புதியவர்களுக்கு) சிறிது குழப்பத்தையே தரும்.

## சுவானுபவ ரச மஞ்சரி

இது 22 பிரகரணங்களைக் கொண்டது.

காசியைப் பற்றிய (அவிமுக்த ஸ்தலம்) பிரகரணத்தை இங்கே காண்போம்:

## அவிமுக்த ஸ்தல மகிமை

"அவி முக்த ஸ்தல" மெனப்பட்ட காசீ க்ஷேத்திரத்தில் மரணமடைதலானது, அத்வைத ஞானமெப்படியோ அப்படியே மோக்ஷத்திற்கு முக்கிய சாதனமாக இருக்கின்றது.

"ஞானந்தான் மோக்ஷத்திற்கு முக்கிய சாதனமென்று சகல சாஸ்திரங்களும் கூறியிருக்க காசி மரணம் சாதன மாதல் கூடுமாவெனில் காசி மரணத்தால் ஞானமுண்டாய் சகலமும் மோக்ஷத்தை அடைகின்றன வென்று சுருதியில் கூறப்பட்டிருப்பதால் கூடும். சிரவண, மனன, நிதித் தியாசன தியான தாரண சமாதியின்றி காசி மரணத்தினால் ஞானம் எப்படி உண்டாகும்?

சுருதிகளில் சத்திய சங்கற்பனுய்த் தெரிய வருகிற ஈசனே காசியில் மரண காலத்தில் சகல பிபீலிகாதி பிரம்ம பரியந்தமும் ஞானோபதேசம் செய்து மோக்ஷ ஸ்வரூபமான தன் சுபாவத்தில் ஐக்கியம் செய்கிறேம் என்னும் பிரதிக் ஞாவானுய் சுருதியில் காணப்படுவதாலும், அவ்வித ஈசன் தன்னுற் கற்பிக்கப்பட்ட ஜகத்தில் பிராணிகளுள்ளத்தில் ஜீவ ரூபமாயும், கூடஸ்த பிரம்ம ரூபமாயும் அனுபிரவேசித் திருப்பதாலும் அவ்வித ஈசன் காசியில் பிராணிகளின் மரண காலத்தில் அவைகளின் இந்திரிய வல்லமை மன திலும், மனதின் வல்லமை புத்தியிலும், புத்தியின் வல்லமை அந்தஃகரணத்திலுமாக ஒடுங்கும்போது தனது சத்திய பிரதிக்ஞையா மருளாய் அந்தஃகரணத்தில் சேஷித்து நின்ற ஜீவனை கூடஸ்தனுக விளங்குவித்து தன்னைத் தவிர வேறில்லாதவனுகக் கொண்டு மோக்ஷ பதவியை அருளிச் செய்கின்ருன்.

மேலும், ஈசனது திருவருளால் மோக்ஷ பதவியை அடைந்த பிரம்ம நிஷ்டர்கள் தங்கள் பார்வையால் மற்றொரு ஜீவனுக்கு சிரவணாதி உதவியின்றி மோக்ஷ பதவியை அருளிச் செய்யலாமாயின் ஸர்வ வல்லமையுடைய அவ்வீசன், சிரவணாதி உதவியின்றி ஜீவர்களுக்கு காசி மரணத்தில், மோக்ஷ பதவியை ஏன் அருளிச் செய்யத் தகான்?''

ஆனால் விருக்ஷாதிகளுக்கு ஞானமில்லாததினால் தன்னைத்தான் அறியும்படி அவைகளுக்கு எவ்விதமாய் பிரகாசிப்பிக்கக்கூடுமெனின, பிரம்ம நிஷ்டர்கள் தங்கள் சொப்பனத்தில் விளங்கிய விருக்ஷாதிகளைக் கண்டு, தங்களால் அவ்வித விருக்ஷங்களாய் விளங்கிய உபாதியில் பிரதிபிம்பித்த சிதாபாஸனைக் கூடஸ்தன் மாத்திரமாகச் செய்து, கூடஸ்தனுன தானாக சாதன பலத்தால் விளங்குவிக்கலாமாயின் ஈசனது சத்திய ஸங்கற்பத்தால் தோன்றிய விராட்சிதாபாஸனின் உள் அடங்கிய விருக்ஷாதி சிதாபாஸனை அதிஷ்டானமான தானாக ஏன் அருளிச் செய்யத் தகான்? ஈசனது கருணையால் சித்தியாகாதது ஒன்றுண்டா? சுருதி, யுக்தி, அனுபவம் இம் மூன்றிற்கும் மோக்ஷ பதவியின்பொருட்டு ஞானம் எப்படி ஒப்பப் படுமோ அப்படியே இதுவும் ஒப்பப்பட்டே யிருக்கின்றது.

சகலருக்கும் இகபர சித்தியின்பொருட்டு ஸர்வாதீஷ்டனான ஈசனது கருணையே உரித்தாயிருக்கின்றது.''

## நிஜானந்த விலாசம்

முதற்பாகம் 10 பிரகரணங்கள் உடையது; அது மாணவர்களின் வினாக்களுக்கு விடை அளிப்பதைப்போல் அமைந்துள்ளது.

இரண்டாம் பாகம் இலக்கணத்தை விவரிக்கிறது. மூன்றாவது "பூர்வ மீமாம்ஸையும்", நான்காவது "நிரீஸ்வர சாங்கியமும்", ஐந்தாவது "ஈஸ்வர சாங்கியமும்," ஆறாவது புத்த மதத்தைப் பற்றியதும் ஆகும்.

ஏழாவது பிரகிருதியைப் (சகஜமதம்) பற்றியது. நரசிம்ம மூர்த்தி, ஸ்ரீ ராமச்சந்திரன், சுப்பிரமணியர் ஆகியோரின் வழிபாட்டு (உபாசனை) முறைகளும் அதில் விளக்கப்பட்டுள்ளன.

ஞான நெறி, யோகநெறி முதலியவற்றையும் சுருக்க மாக விவரிக்கிறது.

நான்கு "மகாவாக்கியங்களுக்கும்" பொருள் கூறும் சிறந்த பிரகரணத்துடன் இந்நூல் முடிவுபெறுகிறது.

1. "பிரக்ஞானம் பிரும்ம" — பிரும்மத்தையே நினைத்திரு.
2. "அகம் பிரும்மாஸ்மி" — நானே பிரும்மன்
3. "தத்வமசி" — அஃது நீயே.
4. "அயம் ஆத்மபிரும்மா — இவ்வாத்மா பிரும்மம்

இப் பத்துப் பக்கங்களும் (அந்நூலின் இறுதிப் பகுதி) ஆழ்ந்து ஒருநிலைப்பட்ட நினைவோடு படிக்கத் தக்கவை.

---

# இணைப்பு

## மரபு




உதவியவர் திரு: ஜி. எஸ். லோகநாதன்

## புத்தகப் பட்டியல்

1. ஸ்ரீ சுந்தர சுவாமிகள் சரித்திரம்

—ஜி. கே. சுப்பையர்

2. சுந்தரரின் சரித்திரம்

—ராமபத்ர சர்மா (லோகோபகாரி)

3. ஸ்ரீ சுந்தர சுவாமிகளின் சரித்திரம்

—ஸ்ரீ காமேச்வரய்யர் 'ஜனமித்திரன்' புதுக்கோட்டை

4. தமிழ் தந்த முனிவர்கள்—(ஆங்கிலம்)

—பேராசிரியர் கே. ஆர். ஆர். சாஸ்திரி

5. ஸ்வானுபூதி ரஸாயனம்

—ஸ்ரீ சுந்தர சுவாமிகள்

6. ஸ்வானுவப ரஸ மஞ்சரி

—ஸ்ரீ சுந்தர சுவாமிகள்

7. நிஜானந்த விலாசம்

—ஸ்ரீ சுந்தர சுவாமிகள்

8. அத்வைதபோத தீபிகை

—(மொழி பெயர்ப்பு) ஸ்ரீ சுந்தர சுவாமிகள்

9. பிரம்மகீதை

—(மொழி பெயர்ப்பு) ஸ்ரீ சுந்தர சுவாமிகள்
(எழுத்துப்பிரதி கிடைக்கவில்லை)

